உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப் பத்திரிகை.

"எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.


தொகுதி-௩௰] ஆங்கிரஸ ஹு ஆனிமீ [பகுதி-அ.
Vol. XXX. June-July-1932. No. 8.


உள்ளுறை.




பத்திராசிரியர்—திரு. நாராயணையங்கார்.

வருஷம் ஒன்றுக்கு ரூ 4.] [தனிப்பிரதி அணா—8.

வெளிநாடுகளுக்கு ரூ 4—8—0.

1932.

Printed by Srimathu Raja M Dinakara Bahadur Avl , and published by Thiru. Narayana Iyengar, at the Tamil Sangam Power Press, No. 54, New Jail Road Madura.

உ

# ஒரு வேண்டுகோள்.

---

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதமொருமுறை வெளிவரும் இச்செந்தமிழ்ப்பத்திரிகையில் வெளியிடுமாறு பொருளுரைகளும், மதிப்புரைவேண்டிப் புத்தகம் முதலியனவும் அனுப்புவோர் அவற்றைப் பத்திராதிபர், செந்தமிழ், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும்,

செந்தமிழில் வெளியிடுமாறு அனுப்பும் விளம்பரங்களையும் பாண்டியன்புத்தகசாலைக்கு நன்கொடையாக அனுப்பும் புத்தகம் முதலியவைகளையும், செந்தமிழ் செந்தமிழ்ப்பிரசுரங்கள் தமிழ்ச்சங்கப் பிரசுரங்கள் சங்கக்கலாசாலை சங்கப்பரீக்ஷைகள் முதலியவைசம்பந்தமாக அனுப்பும் கடிதங்கள் மணியார்டர்கள் முதலியவற்றையும், இன்னும் இச்சங்கசம்பந்தமாயறியவிரும்பியெழுதும் பிறவற்றையும் மானேஜர், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும் அனுப்புமாறு இதன்மூலம் கேட்டுக்கொள்ளலாயிற்று.

மதுரைத்தமிழ்ச்சங்கம்,<br>மதுரை.

லக்ஷ்மீநாராயணையர்,<br>மானேஜர்.

---

உ

கடவுள் துணை.


# செந்தமிழ்.

தொகுதி-௩௰] ஆங்கீரஸஹு ஆனிமீ [பகுதி-௮.

Vol. XXX. June-July-1932. No. 8.


## யவனமஞ்சரி.

### அரிஸ்தாதில் எழுதிய ஒழுக்கநூல்.

[௧௧௨-ம் பக்கத் தொடர்ச்சி]

### 4-ம் அதிகாரம். தீ நட்பு.

இன்ப நிமித்தமாகிய சிநேகிதம் வளரும். ஒரே அளவு இன்பமும் ஒரேவகை இன்பமுமாயின், சிநேகிதம் நீடித்தகாலத்திற்கு நிலைக்கும். வாக்குச்சாதுரியமுள்ள இருவர் கேண்மைகொண்டாடுவர்; இருபுலவரும் கேளிராவர். காதலனும் காதலியும் விழைபும் இன்பம் ஒருவருக்கு மிகுவதினாலும் ஒருவனுக்குக் குறைவதினாலும் அவர்காதல் நிலையாது. காதலிமுன்னிலையிற் காதலன் இன்புறுகிறான். காதலி தன்மேல் காதலன் யாண்டும் அன்புபாராட்டவேண்டும் என நினைக்கிறாள். யௌவனப்பருவத்து வனப்பு அழிந்தவுடன் காதலும் அழிவெய்தும். காதலனை மகிழ்வித்த அழகு இன்மையாற் காதலன் வெறுப்பன்; காதலியும் தன்னைக் காதலன் காதலியாததால் வெறுப்பள். காதலிக்கும் காதலனுக்கும் ஒரேதன்மையான காதல் நிகழுமாயின், அன்பு நிலைப்பதுமுண்டு. பணநயங்கருதிக் காதலித்தவர்களது காதல் பணங்குறையக் குன்றும். நயமேனும் இன்பமேனும் கருதித் தீயார் இருவர் நட்டாராகக் கூடும். தீயனும் தூயனும் சிநேகிதமாதலுமுண்டு. ஆனால் தூயனும் தீயனும் ஒத்த அன்பினராதல் அரிது. நல்லோர்நட்புப் பிறர் புறங்கூறினும் வஞ்சனையாற் கெடுக்கநினைத்தாலும் நிலைக்கும். நல்லோர் மேன்மேலும் நல்லொழுக்கத்திற் றேறுதற்காக நட்டாராவர். இன்பம் நிமித்தமாகிய நட்பும் பயன் நிமித்தமாகிய நட்பும் கேண்மைபோல்வதால் உபசாரமாகக் கேண்மையெனப்படும்.

## 5-ம் அதிகாரம். நட்புப் பழக்கத்தாலாவது.

நட்டார் ஒரு இடத்தில் வாழ்வாராயின் ஒருவர்க்கொருவர் இன்பமும் நன்மையும் செய்து வாழ்வர். துயிலும்போதும் பிரிந்திருக்கும் போதும் இன்பமும் நன்மையும் செய்தல் இயலாதாயினும் இந்நற்குணமமைந்தே இருப்பர். இடத்தானய பிரிவு அவர்நட்பைக் கெடாது. ஆனால், "பிரிவு நீட்டித்தாற் சிலசமயங்களில் நட்பு மறக்கப்படும்" எனப் பழமொழி ஒன்று உளது. வயோதிகரும் துக்கசொரூபிகளும் கேளிரை நாடார். இனி இனத்தைவிரும்பும் இருவர் ஒருவீட்டிற் சீவித்தாற் கேளிராவர். ஓரே இல்லத்தில் வாசஞ்செய்யவிரும்பாத கேளிர் ஒருவர்க்கொருவர் நன்மைவிரும்புவதொழிய நட்பாயிரார். யாங்ஙனமெனிற் கூறுதும். அன்பு என்பது ஒரு மெய்ப்பாடு; நட்பென்பது ஒரு பயிற்சி; நட்புக்கு நோக்கமுண்டு. நோக்கத்தைப் பயிற்சிபண்ணுவதற்கு அடிக்கடி சந்தித்து ஒருவருக்கொருவர் உதவிபுரியவேண்டும். நல்லோரைச் சிநேகிதராக்குவதே ஒருசெல்வம். நல்லோர்நட்பில் அன்பும் சமத்துவமும் தோன்றும்.

## 6-ம் அதிகாரம். பழைமை.

குணநயமில்லாத் துக்கசொரூபிகள் கேளிரை வேண்டார். வயோதிகரும் கேளிரை விரும்பார். சனசமூகத்தில் உவக்குந்தன்மை ஒருவனுக்கு உண்டாயின் அது கேண்மைக்கு ஓர் அங்கமாகும். பலருடன் சிநேகிதனுயிருப்பது ஒருவனது ஆற்றலைக் கடந்தது. உவப்பிக்கத் தக்க பலரைச் சந்திப்பதே அருமை. பலரை ஆராய்ந்து தெரிவதற்கும் நீடித்தகாலம் வேண்டும். பயன்நோக்கி இருவர் கேளிராவாராயின் அவர்கள் மேன்மக்கள் அல்லர். உத்தியோகத்தில் உயர்ந்தோரைச் சிலர் பயன் நோக்கியேனும் சமூகம் நோக்கியேனும் நட்டாராக்க முயலுவர். தம்மினும் உயர்ந்தோரிடம் நல்லோர் நட்புக்கொண்டாட விரும்பார். உத்தியோகத்தில் உயர்ந்தோர் குணமுதலியவற்றில் யாதேனும் குறைவுடையராயின் தாழ்ந்தோன் அவருடன் ஒருவாறு சமத்துவமாய் ஒழுகலாம். உவப்பிக்குந் தன்மையுடைய விகடரையும் தமது ஏவலைச் செய்யக்கூடிய இழிந்தோரையும் உத்தியோகத்தில் உயர்ந்த பிரபுக்களும் தேசாதிபதிகளும் விரும்புவார். ஒருவன் நல்லவனுயினும் அவன் சிநேகிதத்தை உத்தியோகத்தில் உயர்ந்தோர் விரும்பார். இது மனிதசுபாவம்.

## 7-ம் அதிகாரம். பொருந்தாச்சிநேகம்.

பெற்றோர் தம் பிள்ளைகளிடம் பாராட்டும் அன்பிற்கும் வேந்தன் தன் குடிகளிடம் வைத்திருக்கும் அன்பிற்கும் அதிக பேதமுண்டு. வெவ்வேறுநிமித்தமாகவே மகன் தந்தையையும் தந்தை மகனையும் நேசிக்கிறார்கள். ஒருவன் தன்வயதிற் குறைந்தோனுடனும் நட்பாதல் தாரதம்மியமுள்ள சிநேகமாயிருக்கும். தலைவன் அன்பும் தலைவியன்பும் ஏற்றத்தாழ்ச்சியுடைத்தாயிருக்கும். நிமித்தங்களுக்கேற்ப, அன்பு மிகுதலும் குறைதலும் வழக்கம். கேளிர் இருவருக்குள் குல குண பேதம் பெரிதாயின் தீங்குவிளையும். கடவுளோடு ஒருவரும் கேண்மை கொள்வதில்லை. கடவுளுக்கும் மனிதனுக்கும் சமத்துவமில்லாமையால் மனிதனைக் கடவுளது தோழனெனப்படாது. ஒவ்வொருவரும் தம்நயங் கருதுவதால் ஒருவன் தன் சிநேகிதனை இகழ விரும்பான். சிநேகிதன் தெய்வத்தன்மையுடையவனாக மாறுவதும் சிலமனிதருக்கு விருப்பமில்லாமலிருக்கும்.

## 8-ம் அதிகாரம். பொருந்தாச்சிநேகம்.

பலர் தாம் பிறரை நேசியாவிடினும், தம்மைப் பிறர்நேசிக்கவேண்டுமென விரும்புவர். இத்தகைபார்க்கு முகமன்கூறுவார் அதிகரிப்பர். தாய் தன்பிள்ளையை நேசியாவிடின், அன்பினது மூலமாகிய நட்புக் கெடும். நல்லோர் யாண்டும் ஒருதன்மையராகலால் அவர்கேண்மை நிலைக்கும். நட்டார் ஒருவரையொருவர் நல்வழிப்படுத்த முயலவேண்டும். தீயோர் தீச்செயலிற் காமுற்று விரைவில் நட்டாராவர். உவப்பும் பிரயோசனமும் நிமித்தமாக நட்புப்பூண்டோர் அத்தேவை இருக்குந் துணையும் நட்டாராயிருப்பர். செல்வனும் நல்கூர்ந்தோனும், கற்றோனும் கல்லாதோனும், காதலனும் காதலியும், அழகுடையோனும் அழகில்லோனும் என்னும் விரோதகுணமுடையோர் பயன்நோக்கிக் கேளிராவர். காதலன் காதலியைத் தான்காதலிப்பதளவு காதலி தன்னைக் காதலிப்பாளெனநினைத்து, இவ் வீண் எண்ணத்தால் ஏமாற்றப்படுகிறான். விரோதமானவை ஒன்றையொன்று அருமையாகத்தான் விரும்புகின்றன. சூடானது குளிர்ச்சியையும், வறட்சி ஈரத்தையும் வேண்டிநிற்பதைக் காண்க. இவ்வாராய்ச்சி இந்நூலின் எல்லைக்குள் அடங்காதாகலான், இவ்வளவில் நிறுத்துவாம்.

## 9-ம் அதிகாரம். இனம்.

நீதியை ஆராய்வதும் அன்பை ஆராய்வதும் ஒன்றே. எல்லாக் குழூஉக்களின் அங்கத்தினரும் நட்டாராயிருப்பர். பிரயாணஞ்செய்யும் இருவர் ஒருவரையொருவர் கேளிராகக்கொள்வர். சிநேகிதர்கள் சிலசில பண்டங்களைப் பொதுவாய் எல்லார்க்கும் உரிமையுள்ள பொருள்போல உபயோகிப்பர். மரக்கலங்களிற் பிறதேசஞ்சென்று வியாபாரஞ்செய்வோர் திரவியந்தேடல்நிமித்தமாகச் சிநேகிதராவர். யுத்தவீரர் தேசத்தொண்டர் நகரவாசிகள் முதலியோர் தத்தம்குழூவினரை நேசிப்பர். குழூஉக்களும் சபைகளும் சனசமூகத்தின் அங்கங்களே.

## 10-ம் அதிகாரம். அரசாங்கம்.

அரசர் அமைச்சர் தூதர் முதலியோர் அரசாங்கம் என்னும் குழூவைச்சேர்ந்தவர். அரசியல்முறை மூவகைத்து. இம்மூவகைக்கும் வழூக்கள் உள. (1) முதலாவது தனி அரசனால் ஆளப்படுவது. அரசனால் ஆளப்படுவதே செங்கோன்முறை. இதுவே மூவகையுட் சிறந்தது. செங்கோன்முறையின்வழூ கொடுங்கோன்முறை. வேந்தன் ஒருகுறைவுமில்லாதானகையால் தன்னயங்கருதாது பிரசைகளின் நன்மையையும் தேசமுன்னேற்றத்தையும் விரும்புவான். அரசகுடும்பத்தில் இப்பெருந்தன்மையுடையோன் இல்லையாயின் பிரசைகள் தம்முள் தகுதியுடையோனைத் தெரிவுசெய்து முடிசூட்டவேண்டும். (2) இரண்டாவது அரசியல்முறை உயர்ந்தகுலத்தினர்குழூஉ ஆள்வது. இத்தலைவர் குணத்திற் குறைந்து தீயராகின் தீயாரே அரசாளுவர். பொருளையும் உத்தியோகத்தையும் தம்முட் பங்கிட்டு அழிப்பர். குணத்தில் மேம்பட்டோர் அதிகாரஞ்செய்வதே நல்லரசு. (3) மூன்றாவது குடியரசு. இதன் வழூ துர்த்தரரசு என்னுங் கீழ்மக்களரசு. குடியரசு என்பது பிரசைகள் எல்லோரும் சமத்துவமாய்ப் பிரதிநிதிகளைத் தெரிந்து ஒரு கழகத்தை உண்டாக்கி அதற்கு அதிகாரம் கொடுத்து அரசியலை நடத்துவிப்பது. தெரிவுரிமையுடையோர் ஓரளவு பொருளுடையவராயிருத்தல்வேண்டும்.

இம் மூவகை அரசியன்முறைகளைக் குடும்பஉவமானம்நோக்கியறிக. தகப்பனும் மகனும் அரசனும் பிரசையும்போல்வர். ஹோமர் சேயஸ் (கடவுளை) பிதாவென்றார். பார்சியாதேசத்திலே தந்தை கொடுங்கோலன் ; மக்கள் அடிமைகள். எசமானும் தனது அடிமைகளுக்குக்

கொடுங்கோலன். கணவனும் மனைவியும் குணத்தினர்குழூஉவரசு போல இருவரும் தத்தம் இடத்தில் அதிகாரஞ்செலுத்துவர். சில வேளைகளிற் பணச்செருக்கால் மனைவி கணவனை அடக்குகிறாள். சகோதரர்நிலை குடியரசுபோலும். குடியரசு முறைபிறழ்ந்தால் இடையனில்லாப் பட்டிபோலும். குணநலமில்லாக்குடும்பம் பாழ்.

## 11-ம் அதிகாரம். அரசியல் முறையும் நட்பும்.

இம் மூவகை அரசியல்முறையிலும் நீதிசெலுத்துவதுபோல அரசர் அமைச்சர் முதலியோர் பிரசைகளுக்கு அன்புகாட்டலாம். ஹோமர் அகெமெம்னனைப் "பிரசைகளின் இடையன்" என அழைத்தார். பெற்றோர் பிள்ளைகளுக்கு முதற்காரணமாகையாலும் அவர்களை வளர்த்துக் கல்விகற்பிப்பதனாலும் பிள்ளைகள் பெற்றோர்க்குப் பெருங் கடமைப்பட்டோர். சகோதரர் சமத்துவமாயிருப்பது நீதியே. கணவனும் மனைவியும் நட்பாயிருப்பதும் நீதியே. வழுமுறைகளில் அன்பேயில்லை. அடிமைக்கும் எசமானுக்கும் உள்ள தொடர்பு ஆன்மாவுக்கும் அதன் கருவியாகிய உடம்பிற்குமுள்ள தொடர்புபோன்றது. சேதனனுக்கும் அசேதனப்பொருளுக்கும் உள்ள சம்பந்தம் தொழிலாளிக்கும் அவன் கருவிகளுக்கும் உள்ள சம்பந்தம் போலும் அன்பில்லாதது.

## 12-ம் அதிகாரம். அரசியல்முறையும் நட்பும்.

எவ்வகைச்சிநேகிதமும் ஒரு குழூஉவைக்குறிக்கும். சுற்றத்தாரது நட்பு தகப்பனுக்கும் மகனுக்குமுள்ள நட்புப்போல இனத்தாலுயது. தந்தை மகனைப் பிறந்தகாலந்தொட்டு நேசிப்பான். அநுபவமடைந்த பின்னர் மகன் தந்தையைப் பேணுவான். தந்தையினும்பார்க்கத் தாய் மகனிடம் அன்புபாராட்டுவாள். சகோதரர் இருவரது நட்பு சிநேகிதர் இருவரது நட்புப்போலும். ஒரு குடும்பத்திற் பிறந்து, ஒருங்கு சீவித்து, ஒரேகல்லூரியிற் கற்று வாழ்தலால் ஒருவரையொருவர் நன்கறிந்தவராவர். விலங்குகள் தம் சாதியைப் பெருக்குவதற்காகப் புணர்வன. ஆணும் பெண்ணும் மக்கட்பேறு என்னும் நன்மையுடன் இல்வாழ்க்கையின் பங்களாகிய நன்மைகளையும் அடைவதற்காக ஒரு இல்லத்தில் வாழ்வர். இல்வாழ்க்கை அறத்தின்வழியாகலான் மிகச்சிறந்தது. பிள்ளைகள் பெற்றோரின் நட்புநிலைக்கு ஒரு காரணம்.

## 13-ம் அதிகாரம். நட்பு நிலையாமை.

சிநேகிதம் மூவகையுள் ஒவ்வொன்றும் முறையே குணம் குலம் வயது முதலியவற்றால் ஒத்தசிநேகிதம் ஒவ்வாச்சிநேகிதமென இருவகைப் படும். ஒத்தசிநேகர் ஒத்த அன்பினராயிருந்து ஒழுக, ஒவ்வாச்சிநேகர் ஏற்றத்தாழ்ச்சிக்கேற்ப ஒழுகவேண்டும். பயங்கருதிச் சிநேகரானோர் தாம் எதிர்பார்த்திருந்த பயனை எய்தாவிடின் ஒருவரையொருவர் வைவர். இன்பம்நோக்கிச் சிநேகமாயினார் உவப்பிக்குந்தன்மையராகலான், உவப்புக் குன்றப் பிரிவர். பயன்கருதி நட்பானோர் இன்னதற்கு இன்னதென உடன்படிக்கையெழுதிச் சிநேகிதமாவார். இவர் பதிலுக் குப்பதில் செய்வர். இனி, சிலவேளைகளில் உபகாரஞ்செய்தோன் தனது கொடையைப் பெரிதாகநினைக்க, உபகாரத்தைப்பெற்றோன் அதைப் பொருட்படுத்தாது சிறு உதவியாக நினைத்துப் பதில்செய்யாதுவிடுவான். எத்தகைய வெகுமதியைப் பிரதியாகச்செய்தல்வேண்டுமென நிச்சயித் தல் சாதாரணமனிதருக்கு இயலாதசெயல். இவ்வாறு சிநேகம் நிலைகுலை யும். இன்பநோக்கச்சிநேகிதத்திலும் ஒருவர்செய்யும் அளவுநோக்கி மற்றவர் பதிலாக நன்மைசெய்யவேண்டும். பதிலாகச்செய்யும் இன்பம் மிகலாம்; குறையக்கூடாது. அறன் நோக்கமாகச் சிநேகராயினார் ஒருவரை யொருவர் வைவதில்லை. அவ்விருவர்க்கும் நல்லொழுக்கமே நோக்க மாதலால் சமாதானமாகவே இருப்பர். நல்லார் ஒருவரையொருவர் எவ்வளவு மகிழ்வித்தாலும் ஒருபோதும் மிகையாகாது. இத்தகைய சிநேகிதம் சிநேகிதமென்பர்.

## 14-ம் அதிகாரம். நட்பு நிலையாமை.

ஒவ்வாச்சிநேகிதத்திலும் வாக்குவாதம் நிகழ்வதுண்டு. தகுதி யற்றோர் தகுதிக்குமேலாக ஏற்பாராயின் மற்றவர் வைவர். சிநேகிதத்தை வியாபாரவுடன்படிக்கை என நினைத்துப் பயனைப் பங்குபிரிக்க எண்ணு வர். "நல்லசிநேகிதனுக்கு இலக்கணம் தனது சிநேகிதன்குறையை நிவர்த்திபண்ணுவதே" எனக் குறைவேண்டிநிற்கும்சிநேகிதன் கூறு வான். மற்றவன், "என் தகுதிக்கேற்பக் கூடவே கொள்வேன்" என மொழிவான். இங்ஙனம் இருவரும் முறைவேண்டுவார்கள். அரசியல் முறையிலும் தாரதம்மியம்நோக்கித் தகுந்தவர்க்கு மரியாதைசெய்யப் படும். தேசநன்மைக்காகப் பொருட்செலவுசெய்யாதார் புகழப்படார்.

குல குண பேதத்தால் சமத்துவமில்லாச் சிநேகிதர் ஒருவர்க்கொருவர் இயன்றவாறு உதவிசெய்யவேண்டும். ஒருவன் ஒரு உதவிசெய்தால் மற்றவன் வேறோர்வித உதவி புரியலாம். சிற்சிலசமயங்களிற் கடமை செய்யஇயலாது விடுகிறோம். பெற்றோர்க்கு நாம் செய்யவேண்டிய கடமை முழுவதும் செய்யமுடியாது. கடவுட்கும் செய்யவேண்டிய வணக்கத்தைச் செய்யாதுவிடுகிறோம். தந்தை தன்மகனைத் தன்மகன் அன்றென மறுத்தாலும் அம்மகன் தன்தந்தையை மறுப்பது பிழை. தகப்பனுக்கு மகன் கடமைப்பட்டுளனாகையால் தனதுகடமையைச் செய்யவேண்டும். மகன் தூர்த்தனாயிருந்தாலன்றித் தகப்பன் மகனைத் துரத்தான். கடன்கொடுத்தவன் கடனாளிக்கு உதவிபுரியாதுவிடலாம். கடனாளி கடன்கொடுத்துதவியவனுக்குக் கடமைப்பட்டவனாகவே இருப்பன். மகன் கீழ்மகனாயின் தகப்பனுக்குக் கடமைசெய்யாது எப்படித்தப்பலாமென ஆவலோடு ஒருகுற்றத்தை எதிர்பார்த்திருப்பன். பொதுவாக மனிதர் வெகுமதி ஏற்க விரும்புவாரொழியப் பிறர்க்கு உதவிசெய்ய விரும்பார். இது மனிதவியற்கை.

---

## ஒன்பதாம் பாகம். நட்பின்வரலாறு (தொடர்ச்சி).

### 1-ம் அதிகாரம். நட்புநிலையாமை.

வெவ்வேறு பயன் நோக்கிச் சிநேகிதமான இருவர் தாம் நோக்கிய பயனைப் பெறாராயின், அச்சிநேகிதம் நிலையாது. ஏற்றத்தாழ்ச்சிநோக்கியே நீதி செலுத்தப்படுவது. செருப்புத்தைப்போன் தன் செருப்புக்கேற்றவிலையைப் பெறுகிறான். நெசவுகாரனும் படத்திற்கேற்ற பணத்தைப் பெறுகிறான். இவ்வாறே ஒவ்வொருதொழிலினும் பண்டமாற்றிலும் அளவை பணமாதல் அறிக. காதலன் காதலை விளைக்கும் இலக்கணங்கள் இல்லாதவனாயினும் தான் தன் காதலிமேற் காமுறும் காதலி தன்மேற் காதல்கொள்கிறாளில்லை எனக் கவலைப்படுகிறான். இஃதின்னமாக; காதலி, காதலன் வாக்குக்கொடுத்ததை மறந்து தன்னை நேசியாதிருக்கிறானென முறையிடுவள். ஒவ்வாச்சிநேகிதர் இவ்வாறு ஒருவரையொருவர் வைவர். ஒருவரையொருவர் முழுமனத்தோடு காதலியாமல் ஒருவாதுபொருளையேனும் அழகையேனும் விரும்பிச் சிநேகிதமானோர்நட்பு நிலையாது.

இனி வெஃகாமையின்பயனுப் அறத்தின்வழிநிற்போர்கேண்மை நிலைக்குந் தன்மையது. ஒருவன்பொருளை ஒருவன் வெளவக்கருதுவது துன்மார்க்கம். ஒருவன் தனது நண்பனிடம் தான் பெறக்காத்திருந்த பொருளைப் பெறுதபொழுது தன் நண்பனிடம் பொறாமைப்படுவன். ஒரு வீணைவாசிப்பவனுக்கு வாசிப்பதில் நலம் பார்த்து வெகுமதி அளிப்பேன் என ஒரு பிரபு வாக்குக்கொடுத்தான். வீணை வாசித்த பின்பு கூலிவேண்டிநிற்போனுக்குப் பிரபு "உனது கூலி வாசிப்பதில் நீபெற்ற இன்பமே" என விடையளித்தான். இதில் ஒருவர்சோக்கத்தை ஒருவர் அறியாமல் இச்சங்கடம் நேரிட்டது. இச்சந்தர்ப்பத்தில் இன்னதுதான் கூலியெனத் தீர்ப்பது யார்? கூலியைக் கொடுப்பவனோ? ஏற்பவனோ? புரோற்றக்கோருஸ் தனது உபதேசத்திற்குத் தகுந்த வெகுமதியை மாணவரே நிச்சயிக்கவேண்டுமென வற்புறுத்துவர். இஃதொருபுறமாக: கீசியட் கூறுகிறது:-"ஒருவன் தன்கூலியை நிச்சயித்து அத்தொகையைப் பெறலாம்; அத்தொகைக்குமேலதிகமாகப் பெறக் கூடாது". முற்பணம்பெற்றோன் உடன்படிக்கையின்படி செய்யாவிடின், அவன் குற்றவாளி. சோபிஸ என்னும் குதர்க்கர் முற்பணம் வாங்குபவர். அவரது சொற்பொழிவு பொருணயமில்லாததாகலான், ஒருவரும் முழுமனசுடன் வெகுமதிகொடார்.

உடன்படிக்கை எழுதாமல் ஒருவன் தன் விருப்பத்தின்படி ஒரு உதவியைச் செய்தானுயின் அவ்வுதவி குறையுடைத்தாயின் அதற்கு அவ்வுதவியவன் உத்தரவாதியல்லன். இவ்வாறே தத்துவஞானிகளும் மாணவரும் ஒழுகுவது சிறப்பு. ஞானோபதேசத்தைப் பணத்தால் அளவைசெய்தல் நன்றன்று பெற்றோருடனும் தேவருடனும் இவ்வாறே நாம் ஒழுகவேண்டும். பண்டமாற்றில் ஒருவன் தன்சிநேகிதனுக்கு ஒரு பொருளைக் கொடுத்துப் பதிலாக ஒரு தொகை பெறநினைத்தானுக, சிநேகிதன் இதை உணராது ஏற்றதொகையைக் கொடானுயின் சிநேகத்திற் பிரிவு ஏற்படும்.

### 2-ம் அதிகாரம். முரணுன கடமைகள்.

மகன் தன் தந்தையினது கட்டளை எல்லாவற்றுக்கும் கீழ்ப்படிந்து நடப்பது அவசியமோவென வினவுவார் உண்டு. பிணியால் வருந்தும் போது ஆதுரன் வைத்தியன் ஆணைக்கும், சேனுதிபதியைத் தெரிவு செய்யும்போது யுத்தவீரர் தமது மனச்சாட்சியின் ஆஞ்ஞைக்கும் கீழ்ப்படிதல் நன்றோ எனவும் தந்தையின் தவறுன கட்டளைக்குக் கீழ்ப்படிதல்

நன்றோ எனவும் ஐயம் நிகழும். சிநேகிதனுக்கோ அன்றி வேறொருவனுக்கோ முதலில் நாம் உதவிசெய்யவேண்டு மெனவும் ஐயம் நிகழும். இவற்றிற்கெல்லாம் ஒழுக்கவிதிகள் வகுக்கவியலாது. பெற்றநன்மைக்குப் பதில்செய்வதே முறையெனக் கூறுவாயாயின், அறியாது கூறினாய்; உதாரணமுகத்தாற் காட்டுதும். கள்வர்கையில் அகப்பட்ட ஒருவனை ஒரு வள்ளல் பணங்கொடுத்து மீட்கிறான். இவ்வாறு கடமைப்பட்டவன் தன் தகப்பனையும் தன்னை மீட்ட வள்ளலையும் கள்வர் கைப்பற்றியபோது, இருவரில் எவரை முதலில் மீட்கவேண்டும்? கடமைக்குக் கடமைசெய்வதே பொதுவிதியேனும் காலமும் இடமும் நோக்கி வழுவலாம்.

சிற்சிலர்க்குப் பதில் உபகாரமே செய்யக்கூடாது. 'அ' என்போன், நன்றிமறவாதவனென அறிந்தமையாலும், பெற்றகடனைத் திருப்பிக் கெதியாக்கொடுப்பானென அறிந்தமையாலும் 'அ' என்போனுக்கு 'ஆ' என்போன் கடன்கொடுத்து உதவுகிறான். இக்கடன் அழிந்து சிலநாட் கழிந்தபின், ஒரு பெருந்தொகையான பணத்தைக் கடனாகக் கொடுக்கும்படி அ என்போனை ஆ என்போன் வேண்டினனாக, ஆ என்போன் தூர்த்தனென அறிந்து அ என்போன் மறுக்கிறான். அ என்போன் செயல் குற்றமுடைத்தன்று. ஒழுக்கமுறை ஒவ்வொரு செயலின் சிறப்புநோக்கி நிச்சயிக்கப்படுமென முன்னர்க் கூறினோம். குடும்பத் தலைவனுக்கு அதிகாரம் யாண்டும் பெரிதன்று. தேவர்க்குப் பலியிடும்போது எல்லாவற்றையும் சேயஸ் என்னும் பெருங்கடவுட்கோ பலியிடுகிறோம்? கடமைகள் மூளையின் மனச்சாட்சியின்படி ஏற்றதைச் செய்வதே முறை. மரியாதைசெய்யும்போதும் முகம்பார்த்துச் செய்யவேண்டுமென்பர். தந்தைக்குச்செய்யும் மரியாதை ஒன்று; தாய்க்குச்செய்யும் மரியாதை வேறொன்று சுற்றத்தார்க்கு மற்றொன்று; ஞானிக்கு இவற்றினும் வேறு. மூத்தோர்க்குச்செய்யும் மரியாதையும் கூட்டாளிக்குச்செய்யும் மரியாதையும் வேறுதல் காண்க அன்றியும், தோழர்க்கும் அந்நியர்க்கும் வெவ்வேறான விதிப்படி மரியாதை செய்யும் நமது வழக்கங்களையும் நோக்குக.

### 3-ம் அதிகாரம். நட்பிற் பிரிவு.

எச்சமயத்திற் சிநேகிதம் அழிகின்றது? பயன்நோக்கி இருவர் சிநேகிதரானாரெனின் அப்பயன்பெற்றவுடன் சிநேகிதம் அழிவது

இயல்பு. தம் நிமித்தத்தைமறைத்து வெளித்தோற்றத்திற்கு நல்லொ ழுக்கத்தை நிமித்தமாகக்கூறிச் சிநேகிதராயினோர் கலகப்படுவர். இனித் தான் சன்மார்க்கனெனமொழிந்தும் போலிநிமித்தங் கூறியும் சிநேகித னானவன் பிறர் தனக்கு உண்மைச்சிநேகிதராயிருப்பர் என எதிர்பார்த் திருப்பது பேதைமை. இக்கபடம் அறிந்தவுடன் இந்நட்பை யாவரும் வெறுப்பர். இச்சிநேகத்தை உடனே அழிக்கவேண்டுமோ? தீயனையுந் திருத்தமுயல்வதே நன்மக்கள்கடனெனின், தூர்த்தரைத் திருத்தஇயலா தென அறிந்தபின் அவர்நட்பைப் போற்றாதுவிடலாம். சிநேகிதரிருவ ரில் ஒருவன் குணத்தில் மாறுமலிருப்ப, ஒருவன் நல்லொழுக்கத்தில் தேறினனாகில் என்செய்யலாம்? இருசிறுவர் சிநேகிதராய் வளர்கிறார்கள். ஒருவன் நற்குண நற்செயல்களிற் சிறந்து நல்லறிஞனாக, மற்றவன் விளக்கங் குறைந்து அநுபவத்தின்பயனை அடையாதிருப்பானாயின், இருவரும் கேளிராயிருக்கலாமோ? இக்கேண்மை நிலைக்குமா? இருவரிடத்தும் குற்றமின்மையான் ஒருவரையொருவர் முழுவதும் மறக்கக்கூடாது. மறக்கலாமெனின், அற்றன்று. அன்னியரினும் பழையசிநேகிதரைக் கொண்டாடுவது உலகவழக்கம்.

## 4-ம் அதிகாரம். நட்டாரின்தன்மை.

ஒருவன் தன்னயத்தை எவ்வாறுகருதுகிறானோ அவ்வாறே தன் சிநேகிதாநயத்தையும் கருதல்வேண்டும் என்பர். நட்பின்காரண மாகத் தன் நண்பன் தனக்குசெய்யவேண்டுமெனவிரும்புவதெல்லாவற் றையும் ஒருவன் தன் சிநேகிதனுக்குத் தான்செய்யவேண்டும். சிநே கிதன்விரும்புவதையும் தெரிவதையும் விரும்புவதும் தெரிவதுமே சிநே கிதனின் இலக்கணம். சிநேகிதர் இன்பத்திலும் துன்பத்திலும் பங்கு பற்றுவர். ஒருமனிதனது உடலும் உயிரும் ஒருமித்து ஒன்றற்கொன் றுதவுவதுபோல ஒருவன் தன் சிநேகிதனுடன் ஒருமித்து இருக்கவேண் டும். தந்நயங்கருதிப் பருத்தறிவின்கட்டளைப்படி நன்மக்கள் வினை செய்வர். நல்லோர் இறந்தகாலநன்மைகளையெல்லாம் நினைவுகூர்ந்து எதிர்காலத்தும் அந்நன்மைகளைப் பெறலாமெனநினைந்து இன்புறுவர். இவர் தம் நெஞ்சொடுகிளத்தலில் இன்புறுகிறார்கள். நமக்கு நல்லோர் தம் சிநேகிதர்க்கும் நல்லவராயிருப்பர். ஒருவன் தனக்குச்சிநேகிதனா யிருக்கலாமோ என்பதை ஈண்டு ஆராயாதுவிடுவோம். நல்லோர் தமக்கு

இனிமையாய்த்தோன்றுவதையே விரும்புவர். இனிமையாய்த்தோன்றுவது சிலவேளைகளில் தீங்குவிளைப்பதெனின், அது அருமை. தீயோர் தாம் செய்த தீச்செயலை மறப்பதற்காகத் தமது சமூகத்தையேவெறுத்து நெஞ்சொடுகிளத்தல்செய்யாது பிறருடன் கலந்து சம்பாஷித்துக் காலத்தைப்போக்கவிரும்புவர். பரிதாபம்; தங்களையே தாம் நேசிக்க இயலாது துன்புறுவர். இத்தன்மையினரின் பகுத்தறிவும் பகுத்தறிவில்லாப் பகுதியும் மாறுகி ஒன்று மேனோக்கமுடைத்தாயும் ஒன்று கீழ்நோக்கமுடைத்தாயும் மனசைப் பங்கப்படுத்தும்.

### 5-ம் அதிகாரம். நட்பும் பிரர்நயம் விரும்புதலும்.

அறஞ்செய்வோர் எவரிடத்தும் சூக்குமமாய் அமைந்திருக்கும் நற்குணமாகிய பிறர்நயம்விரும்புதல் நட்பைக்குறிப்பினும் அது நட்பென மலையற்க. அந்நியரும் மகிழ்ந்திருக்கவேண்டுமென நாம் வேண்டுவேம். இவ்விருப்பத்தைக் கேண்மையென மொழியேம். பிறர்நயம் விரும்புதல் காதலுமன்று. காதலிப்போர் பழக்கமுடையவராயிருப்பர். பிறர்நயம்விரும்புவோர்க்குப் பழக்கம் அவசியமன்று. அன்னியர் ஒருவரைச் சந்தித்துப்பேசும்போதும், "ஆசீர்வதிக்கப்படுவீராக" என்றும், "நீடூழிவாழ்வீராக" என்றும் நாம் விரும்புவது வழக்கம். தலைவியில்லாமல் தலைவன் காதலிப்பது யாங்ஙனம்? அழகு என்னும் காண்டற்காட்சியின் முன்னிலையே காதற்குக் காரணமாவதுபோல, பிறர்நயம் விரும்புதல் கேண்மையின் முதற்காரணமாகிய அணு. பிறர்நயம்விரும்புதலில் நட்பு சூக்குமமாயிருந்து, காலக்கிரமத்தில் வளர்ந்து தூலமாகிக் கேண்மையாய்த்துலங்கும். ஒருவரின் அழகு, வீரம், ஒழுக்கம் முதலிய நற்குணத்திலே நாம் விழைந்து பிறர்நயம் விரும்புவேம். இனிப் பழக்கங்காரணமாய்ப் பிறர்நயம்விழைவேம்.

### 6-ம் அதிகாரம். சிநேகிதர் ஒத்தமனத்தினராயிருத்தல் அவசியம்.

அபிப்பிராயத்தில் ஒப்பதும் சாஸ்திரவறிவால் ஒப்பதும் நட்பென நாம் மயக்கக்கூடாது. அறம் பொருள் இன்பம் முதலியவற்றால் மனமொத்திருத்தல் கேண்மையிலக்கு அறிகுறியாகும். ஒருதேசத்தில் பிரசைகள் ஏகோபித்துப் பிரதிநிதிகளையும் மந்திரிகளையும் தெரிவுசெய்வாராயின் அத்தேசம் கட்சிகளின்றிச் சமாதானமாயிருப்பதால் முன்

னேற்றமடையும். அமைச்சர் எத்தேசத்தைத் துணையாக்கவேண்டும் என்பதை ஏகோபித்து நிச்சயிப்பது நல்லது. பிற்ருக்கஸ் என்பவரைத் தேசாதிபதியாக்கினுல் பிற்ருக்கஸூம் அதற்குச் சம்மதிக்கவேண்டும். யுறிப்பிடிஸ் என்பவரது பினிசாயி என்னும் நாடகத்திற் சகோதரர்கள் ஒரு இராச்சியத்தில் தலைமைவகிக்க ஒருவரோடு ஒருவர் போர்புரிவது போலத் தலைவர்களைத் தெரிவுசெய்யும்போது கட்சியாய்ப் பிரியக்கூடாது. தனவான்களும் வறியோரும் ஒருமித்து ஒருவரைத் தேசாதிபதியாக்குவதே நல்லது. கடல் பெருகுவதும் வற்றுவதும்போலச் சிநேகநிலை தளும்பக்கூடாது. பிரசைகள் முழுமனத்தோடு ஒருவர்க்கொருவர் உதவிபுரியாவிடின், ஒருவரையொருவர்கண்டித்துக் கலகப்படுவர்.

### 7-ம் அதிகாரம். ஒருதலைக் கேண்மை.

வெகுமதிபெற்றோர் கொடுப்போரை நேசிப்பதிலும்பார்க்க வெகுமதி அளிப்போர் பெறுவோரைநேசித்தற்குக் காரணம் யாது? இருவரும் கடன் கொடுத்தவரும் கடன்வாங்கினவரும் போல்வர் என்பர் சிலர். கடன்கொடுத்தோர் கடன்காரனின் நயத்தைத் தம் நயங்கருதி விரும்புவர். இவ்வாறு அறியாது போலி உவமானங் கூறினர். நன்றி மறப்பது மனிதனது இயற்கை. இதுவே உண்மையானநியாயம். இது காரணமாகவே வெகுமதிபெற்றோர் நன்றியை மறக்கின்றனர். கடன்காரனது உவமானம் ஈண்டுப் பொருந்தாது. கடன்கொடுத்தோன் கடன்காரனை உண்மையாக நேசிப்பவனல்லன். வெகுமதிகொடுத்தோன் தன்னயங்கருதாது அருள்புரிந்து செய்தவனுகையால் அவனது கொடையும் அன்பும் போற்றப்படும். தொழிலாளர் தாம் இயற்றிய பொருள்களில் விருப்பமுடையராயிருப்பதையும் பொருள்கள் தம்மை உண்டாக்கினவர்க்குச் சற்றும் நன்றிகூருதிருப்பதையும் உற்றுநோக்கி மேற்கூறப்பட்ட உண்மையைக் கடைப்பிடிக்க, புலவர்கள் தம் குழந்தைகளிலும் தமது பனுவல்களிற் காமுறுவர். இக்காதலும் கொடையளிப்போர்காதலும் ஒருபுடையொக்கும். தாம் இயற்றியது ஒருவாறு தம் இயல்பைக் காட்டுவதால் இயற்றியதைக் காதலிப்பது உயிர்ப்பிராணிகளின் சுபாவம்.

நம்முடைய சத்திகளைப் பயிற்சிபண்ணுவதிலே நாம் நம்முடைய தன்மைகளை அறிகிறோம். இம்மையில் வாழ்க்கை என்பது என்ன?

எங்களை உணர்வதேயன்றி வேறென்ன? இம்மையில் நாம் முயற்சியா யிருப்பதே வாழ்க்கைநலம். தூலகாரியமாய் அறியப்படாத ஒரு சூக்கும சத்தி, அதன் தொழில்நோக்கியே அறியப்படுமென்பது இயற்கைப்பிரமாணம். வள்ளல் தன்கொடையில் தன் நற்குணத்தை உணர்ந்து இன்புறுகின்றான். இரப்போன் வள்ளலது இன்பத்தை உணராது தான் பெற்ற கொடை தனக்குப் பயனுடைத்தென மகிழ்வன். இறந்தகாலத்திற் செய்தவற்றையும் எதிர்காலத்திற் செய்வனவற்றையும் நினைந்து நாம் நிகழ்காலத்தில் இன்புறுகிறோம். காதலிக்கப்படுவதிலும் காதலிப்பதே நன்று. ஊக்கம் மனிதனது சிறந்தகுணமாதலான், ஒருவன் சுறுசுறுப்பாயிருந்து தன் சத்திகளைப் பயிற்சிபண்ணுவன். என்னை? காதலிக்கும் போது ஒருவன் நிமித்தகாரணனும் இயற்றுதற்கருத்தாவாய்ச் சுறுசுறுப்பாய் ஒருமுயற்சியைச் செய்வன். இயற்றுதற்கருத்தாவாயேனும் நிமித்தகாரணனாயேனும் இருப்பது சிறார்க்கும் விருத்தர்க்கும் கற்றோர்க்கும் கல்லாதோர்க்கும் யாதொரு வேறுபாடுமின்றி யாண்டும் இன்பமுடைத்து. கொடையாகப்பெற்ற பொருளினும் வருந்தி உழைத்த பொருளில் நாம் இன்புறுகிறோமல்லவா?

## 8-ம் அதிகாரம். தன்னயங்கருதல்.

ஒருவன் தன்னயத்தையோ பிறர்நயத்தையோ கருதவேண்டும்? தந்நயங்கருதுவோரைத் தீயோரெனறும் அறஞ்செய்யாதோரென்றும் கூறுகின்றனர். நல்லோர் தந்நயங்கருதாது ஒழுக்கமேன்மையைப் போற்றுவர். சான்றோர்வாக்கியங்களும் பிறர்நயங்கருதவேண்டுமென் பதை வலியுறுத்துகின்றன. ''சிநேகிதர் பொருள்முதலியவற்றைப் பொதுவாக வைத்திருப்பர்''; ''சமத்துவமே சிநேகிதம்''; ''சிநேகிதர்க்கு உடல் இரண்டாயினும் உயிர் ஒன்று'' என்னும் முதுமொழிகளை ஆராய்க. இவ் அரிய கேண்மைநிலையடைதற்கு ஒருவன் தனது மனச்சாட்சிக்குத் தூயனாய்த் தனக்கே முதற்சிநேகிதனாகவேண்டும். இங்ஙனமாதலில் தன்னயமே முதலிற் கருதல் நல்லது. ஈண்டுத் தன்னயம் என்பது இருவேறுகருத்தில்உபயோகிக்கப்பட்டதென்பது வெளிப்படை. தன்னயம் தீயொழுக்கமென்பது வழக்கம். பெரும்பாலும் மனிதர் நீதி வழுவுதலாலும்புலன்வழிச்சேறலாலும் தன்னயங்கருதல்கூடாவொழுக்கமாயிற்று. இவ்வாறு தந்நயங்கருதுவோர், ஆன்மாவின் பகுத்தறிவில்லாப்

பகுதியாகிய மெய்ப்பாட்டின் ஏவல்வழி ஒழுகுவோர். இத்தீயொழுக்கம் விழைபவனைத் தன்னயங்கருதுவோன் என்பேம். ஆராய்ந்துபார்த்தால் தீயார் இத்தீயொழுக்கத்தை அறியாமைகாரணமாகவிரும்பித் தந்நயங் கருதித் தங் கேடே விழைவர். இனி நல்லொழுக்கத்தில் தான் சிறந்தோனாக எண்ணப்படுவதற்கு ஆசைப்படுதல் தன்னயங்கருதல். அடக்கமுடையவன் பகுத்தறிவின் ஆணைப்படி ஒழுகித் தன்ஆசைகளை நிறைவேற்றுகிறான். நல்லோர் இத்தன்மையராய்த் தந்நயங்கருதுபவராகில் நல்லொழுக்க மெனப்போம். தந்நயத்திற்கு முன்னர்க்கூறிய அர்த்தத்தைத் தவிர்த்துப்பின்னர்க் கூறிய அர்த்தத்தில் அச்சொல்லைப் பிரயோகிப்போம். தீயோர் தந்நயங்கருதித் தாமும் கெட்டு அயலோரையும் கெடுப்பர். நல்லோர் பலவாண்டு வாழ்வதிலும் சிலவாண்டிற் பிறர்க்கு உதவி செய்யக்கூடுமானால் இச் சிலவாண்டுசீவியத்தையே விரும்புவர். இத்தகையோர் தம் செல்வத்தையும் பிறர்க்கு உதவுவார். தமது சிநேகிதர்க்காகத் தம் இடையூறுநோக்காது எத்தொண்டும் செய்வார். இத்தொண்டுகள் யாவர்க்கும் மேன்மை பயப்பதால், தொண்டரைத் தந்நயங் கருதுவோரெனலாம். இத்தகைய தந்நயங் கருதல் அறவொழுக்கம்.

### 9-ம் அதிகாரம். சந்தோஷசீவியத்திற்குக் கேளிர் வேண்டுமோ?

எல்லாச் செல்வமுமுடையோர்க்குத் தேவை ஒன்றுமின்மையான், அவர்க்குச் சிநேகிதரின்மை ஒருகுறைவன்று என்பர் சிலர். எச்செல்வம் உடையவனுக்கும் சிநேகிதம் என்னும் செல்வம் வேண்டப்படும். சிநேகிதன் என்பது தானே வேறொருவனாகத் தோன்றுவது. சிநேகிதர் இருவரின் மனம் ஒன்றே. அருளுருவமாகிய கடவுள் நல்லோர்க்கு எல்லாநன்மைகளையும் கொடுத்து ஆசீர்வதித்து அருள்புரிந்து உலக நன்மைகளிற் சிறந்ததாகிய கேண்மையைக் கொடாதுவிடுதல் விநோதம். நல்லோர் கொடையளிப்பதற்குச் சிநேகிதர் வேண்டுவர். இனிச் சிலர் செல்வத்திலோ? நல்குரவிலோ? சிநேகிதர் அவசியம்வேண்டுமென வினவுவர். செல்வத்தில் நாம் பிறர்க்குதவிசெய்வதற்காகவும் நல்குரவில் நமக்கு உதவிசெய்வதற்காகவும் சிநேகிதர்வேண்டுமென விடை அளிப்பேம். சாதாரணமனிதர் தமக்கு உதவக்கூடியோரையே சிநேகிதரென்பர். இத்தகைய சிநேகிதர் எல்லாச்செல்வத்தாலும் ஆசீர்வதிக்கப்பட்டவர்க்கு வேண்டியதில்லை.

சந்தோஷமுடையவன் சனசமூகமின்றி சீத்தார்போலத் தனித்திருப்பதில்லை. சனசமூகத்திற் சீவிப்பதே மனிதனியல்பாகையால், மனிதனைத் துறவியாக்கித் தனித்திருக்கச்செய்வது கொடிது. சந்தோஷநிலைக்குச் சிநேகிதம் இன்றியமையாதது. அன்னியருடன் வாழ்வதிலும் நட்டாருடன்வாழ்வது இனிது. பிறர்செயல் நல்லதாயின், நல்லவன் அதில் இன்புற்றுச் சந்தோஷிப்பன். தன்செயல் திறமன்றாயின் பிறருடையதிறத்தைத் தியானித்து இன்புறுவதற்குச் சிநேகிதர் வேண்டுவன். நற்பயிற்சிகளிலும் நன்முயற்சிகளிலும் சிநேகிதர் உதவி பெரிதும் பயன்படும். இன்பவாழ்க்கை என்பது நிச்சயிக்கப்பட்ட சீவியம்; நிச்சயிக்கப்பட்டதென்பது மெய்ப்பாட்டானன்று, பகுத்தறிவானுகையால் இன்பவாழ்க்கையும் ஓர் பயிற்சியாகும். இப்பயிற்சியால் பேரின்பம் விளையும். இதற்கு நட்பு ஓர் துணைக்காரணமாகும். நாம் உயிர்நிலையில் இருக்கிறோமென்பது என்ன? எம் சத்திகளைப் பயன்படுத்துகிறோமென்பதே. கேளிருடன் இன்புற்று அன்பைப் பெருக்கி வாழ்வதே இன்பவாழ்க்கை. இவ்வுணர்ச்சியில் நாம் பேரின்பம்விழைவேம்.

## 10-ம் அதிகாரம். நட்டார் பலர் வேண்டுமோ?

தன்னலங்கருதிச் சிநேகிதம்வேண்டினல் பலரை நட்பாக்குவது நல்லது. இம்மையில் வாழும் நாள் சிலவாகலான், பலரை நட்டாராக்குவது வல்லமை. இனி இன்பங்கருதிச் சிநேகிதர் தேவைப்பட்டாற் சிறுதொகையான கேளிரைக்கொள்ளல் மிகவும் நல்லது. பல சிநேகிதருடன் பழகுவது இயலாதசெயலாகையால், சிலரே போதும். மேலும் ஒருவரது சிநேகிதர் தம்முட் சிநேகிதராயிருத்தல் அவசியம். சிநேகிதர் பலராயின் அவர்கள்தம்முட் சிநேகிதமாயிருப்பது அருமையாகலான், விவேகி சிலருடன்மட்டும் சிநேகனுவான். இது காரணமாகவே ஒரு பெண்ணை மட்டும் ஒருவன் விவாகஞ்செய்வது இல்வாழ்க்கைமுறையெனப்பட்டது. மேலும் பலரோடு இன்பதுன்பங்களிற் பங்குபற்றுதல் வல்லமை. காதலனும் காதலியும்போன்ற இருவரது சிநேகத்தையே புலவர்கள் பெரும்பாலும் போற்றுவர். ஆனுல் எல்லோருடனும் முகமலர்ந்து எவரையும் உவப்பிக்குந்தன்மையர் ஒருவருக்கும் சிநேகிதரல்லர்.

## 11-ம் அதிகாரம். நட்பின் பயன்.

துக்கத்திலும் நல்குரவிலும் நட்டாரைக்காண்பதுவும் நலமே. எமது சிநேகிதன் எமது குணத்தை அறிந்தவனாகையால், எமது துக்கத்தைத் தீர்க்கும்வழியும் அறிந்தவனாயிருப்பன். நாம் எமது துன்பத்தை எமது சிநேகிதருக்கு அறிவித்து அவரைத் துன்புறுத்த விரும்பேம். இது வன்மை. பெண்களும் மனவலிமையில்லாத ஆடவரும் தமது துன்பத்திற் பிறர் இரங்கித் துன்புறுதலைப்பார்த்து ஆறுதலடைவர். அன்றியும் செல்வநிலையிலும் எமது சிநேகிதருடன் அளவளாவுதல் இன்பமுடைத்து. சிநேகிதர் அழைக்கப்படாவிடினும், தம் நண்பர்க்கு யாதேனும் துன்பம்நிகழ்ந்தால் அவ்விடையூற்றைக் கேள்விப்பட்டவுடன் போய்த் துன்புறுபவனுக்கு உதவிபுரியவேண்டும். ஆனால் சிநேகிதரின் செல்வத்தில் ஒருவன் பங்குபற்ற முன்னிற்றல் ஆகாது. எங்ஙனமாயினும் இன்பத்திலும் துன்பத்திலும் சிநேகிதரோடு சிநேகிதர் அளவளாவுவது நன்று.

## 12-ம் அதிகாரம். இனம் சிநேகிதத்தை வளர்க்கும்.

காதலனும் காதலியும் ஒருவரையொருவர் காண்பதில் இன்புறுதல் போலச் சிநேகிதரும் அடிக்கடி சந்தித்துக் களிக்க விரும்புவர். தீயோர் தம்மினஞ்சேர்ந்து களித்தலைக் காணலாம். சூதாடுபவர் சூதாடுபவருடனும், மதுபானஞ்செய்வோர் மதுபானஞ்செய்வோருடனும் இனந் தேடுவதைக் காணலாம். தேகாப்பியாசம்செய்வாரும் இவ்வாறு இனந் தேடுவர். தத்துவஞானப்பயிற்சிசெய்வோரும் தத்துவஞானிகளிடஞ் சென்று தேர்ச்சியடைவர். இனத்தால் ஒழுக்கம் வளர்வதால் நல்லினம் நாடப்படும். சான்றோரிடம் நல்லொழுக்கம் பழகலாம் என்பது தியோக்ஸ்கின் பழமொழி.

நட்பின் வரலாறு முற்றிற்று.

[தொடரும்.]

த. இராமநாதபிள்ளை B.A.

உ

கணபதிதுணை.

சின்னப்ப நாயக்கர் இயற்றிய

# பழனிப் பிள்ளைத்தமிழ்.

இது

மஹாமஹோபாத்யாய - தாக்ஷிணாத்யகலாநிதி

**Dr. உ. வே. சாமிநாதையரவர்களால்**

பரிசோதித்துத்

தாம் நூதனமாக எழுதிய குறிப்புரையுடன்

பதிப்பிக்கப்பெற்றது.




செந்தமிழ்ப்பிரசுரம் — ௫௮.

மதுரைத் தமிழ்ச்சங்க முத்திராசாலை,

மதுரை.

1932.

விலை அணா 3.

# முகவுரை.

கந்தரலங்காரம்.

மொய்தா ரணிகுழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால்
வைதா ரையுமங்கு வாழவைப் போன்வெய்ய வாரணம்போற்
கைதா னிருப துடையான் றலைபத்துங் கத்தரிக்க
எய்தான் மருக னுமையாள் பயந்த விலஞ்சியமே.

பிள்ளைத்தமிழென்னும் தமிழ்ப்பிரபந்தம், பாட்டுடைத்தலைவரைக் குழந்தையாகப் பாவித்துச் செவிலித்தாய் முதலியோர் அக்குழந்தையின் காப்புமுதலிய பத்துப் பருவங்களுக்கு ஏற்ற செயல்களைக்கூறிப் பாராட்டுவதாக ஆசிரியவிருத்தத்தினுற் பாடப்படுவது. இஃது ஆண்பாற்பிள்ளைத்தமிழென்றும் பெண்பாற்பிள்ளைத்தமிழென்றும் இருவகைப்படும். காப்புப்பருவம்முதல் சிறுதேர்ப்பருவம் இறுதியாகவுள்ள பத்துப் பருவங்களமைந்தது ஆண்பாற்பிள்ளைத்தமிழ்; பெண்பாற்பிள்ளைத்தமிழ் இவற்றிற் சிலபருவங்களைப் பெறுமல் வேறுசிலவற்றைப் பெறும்.

இந்தப் பழனிப்பிள்ளைத்தமிழ், பழனியில் திருக்கோயில்கொண்டெழுந்தருளியுள்ள முருகக்கடவுளைப் பாட்டுடைத்தலைவராகக்கொண்டு சின்னப்பநாயக்கரென்பவரால் இயற்றப்பெற்றது. காப்புச்செய்யுளோடு முப்பத்தொரு செய்யுட்களையுடையது. ஒவ்வொரு பருவத்திலும் மும்மூன்றுசெய்யுட்களே உள்ளன. பத்துப்பத்துப் பாடல்கள் இருத்தல் வேண்டுமென்பது விதியெனினும், சில கவிஞர்கள் அத்தொகையிற் குறைத்தும் பாடியுள்ளார்கள். ஒவ்வொரு பருவத்திற்கும் எவ்வேழு பாடல்களையுடைய . சிவந்தெழுந்த பல்லவராயன் பிள்ளைத்தமிழும், ஐவைந்து பாடல்களையுடைய கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத் தமிழும் அம்முறையில் இயற்றப்பெற்றவை.

இதன் ஆசிரியரைப்பற்றி வேறொருசெய்தியும் அறியக்கூடவில்லை. "விசயகோபாலர் வாவிட்ட சிறுதேர்" (31) என இந்நூலில் இவர் கூறியிருத்தலால், பழனிக்கு அருகிலுள்ள பாலசமுத்திரமென்னும் ஊரிலிருந்த ஜமீந்தாராகிய விஜயகோபாலதுரை யென்பவரால் இவர் ஆதரிக்கப்பெற்றவரென்பது ஊகிக்கப்படுகிறது. இவருடைய வாக்கினால் இவர் முருகக்கடவுளிடத்து உண்மையான அன்புடையவரென்று தோற்றுகின்றது.

இத்தலத்திற்கு வேறொரு பிள்ளைத்தமிழ் உண்டென்று கேள்வியுற்றிருப்பதாகவும், "தப்பாத பழனிமலை யப்பாவெ னப்பனீ சப்பாணி கொட்டி யருளே" என்பது அதிலுள்ள ஒருசெய்யுட்பகுதியென்றும் திண்டுக்கல் வக்கீல் மகா-ள-ள-ஸ்ரீ எல். ஏ. வேங்குஸாமி ஐயரவர்கள் சொன்னார்கள்.

இந்நூலில் பழனிசம்பந்தமான பலவகைச்செய்திகள் அமைந்துள்ளன. பழனித்தலம் வைகாவூர் நாட்டிலுள்ளதென்பதும், அதற்கு ஆவினன்குடி, வைகாவூரென்னும் பெயர்களுண்டென்பதும், பழனிமலை சிவகிரியெனவும் வழங்கப்படுமென்பதும், பழனியைச்சார்ந்த ஊர்களாக எட்டுமங்கலங்களும், பன்னிரண்டு பள்ளிகளும், நூறூர்களும் உள்ளன என்பதும் அறியப்படுகின்றன. அன்றியும், பன்றிமலை, பூம்புரை, இடும்பன்மலை, ஷண்முகநதி என்பனவும் இதிற் கூறப்படுகின்றன. பழனியிற் கோயில்கொண்டெழுந்தருளியுள்ள பெருங்நாயகியைப் பெரியநாயகி, பெரியவளென ஆசிரியர் பாடுகின்றார். முருகக்கடவுள் சிவபெருமானுக்கு உபதேசித்தது, அவர் அகத்தியருக்கு உபதேசித்தது, அவர் சங்கத்தலைவராக இருந்தது, அவருக்கு யானைவாகனமுண்டென்பது, அவர் ஆட்டுக்கிடாயையூர்ந்தது, வெட்சியும்கடம்பும் அவர் மாலைகளென்பது, மயில் பிரணவ உருவமென்பது முதலிய செய்திகள் இதில் அமைந்துள்ளன. முருகக்கடவுள் சிவபெருமானை வலம்வந்து கனியைப்பெற்றனரென்ற வரலாறு ஓரிடத்திற் குறிக்கப்பட்டுளது. அதற்குரிய ஆதாரம் கிடைக்கவில்லை. முருகக்கடவுளை முத்தைய

னென்றும் தேவயானையைக் கயவனிதையென்றும் கூறுவர். அல்லோல கல்லோலம், இலை (வெற்றிலை), கன்னங்கறுத்த, சம்மதி, சரிசமானம், சின்னஞ்சிறிய, சுசந்திரன், சுதி, சேதி, தயவு, துசம், துரை, பிளவு, புதம் (அறிவு), மத்தளி, மந்தாரம், மனது, மாமனார், முதலாளி, மெட்டி, ராவுத்தன், வசியாதார், விதாணம், வேணும் முதலிய அரும் பதங்களும் நெறுநெறென, குடகுடென எனவரும் அனுகரண ஓசைச் சொற்களும் இதில் ஆளப்பட்டுள்ளன. செவிலியர் தாலாட்டுதலைக் கூற வந்த இவர் அப்பொழுது கூறப்படும் 'ஆரார்' என்னும் குறிப்புத் தொடரை யார் யார் என்னும் பொருள்படப் பொருத்தி,

"சீரார் நலஞ்சேர் பூவுலகிற் றேவா சுரரின் மற்றையரிற்
றினமு முனது கொலுக்காணச் செல்லா தாரார் திறைவளங்கள்
தாரா தாரா ருனதுபதந் தனையே வணங்கித் தொழவேண்டித்
தழுவா தாரா ரெவ்வேளை சமயங் கிடைக்கு மெனநினைந்து
வாரா தாரா ருனதருளை வாழ்த்திப் புகழ்ந்து துதிக்க மனம்
வசியா தாரார் பணிவிடைகள் வரிசைப் படியே நடத்தாதார்
ஆரா ரெனத்தா லாட்டுகின்ற அரசே"

என அமைத்துள்ள பகுதி மிக்க நயம்பொருந்தி விளங்குகின்றது.

இந்நூலெழுதிய ஏட்டுப்பிரதியொன்றும் கடிதப்பிரதியொன்றும் 25-வருடங்களுக்கு முன் மேற்கூறிய எல். ஏ. வேங்குஸாமி ஐயரவர்க ளால் உதவப்பட்டன. அவ்வேட்டுப்பிரதியில் 'சின்னப்ப நாயக்கர் இயற்றியது' என்ற ஒரு குறிப்பு எழுதப்பட்டிருந்தது. இந்நூல் எளியநடையில் அமைந்திருத்தலின் சில இடங்களுக்குமட்டும் குறிப் புரை எழுதி இப்பொழுது பதிப்பிக்கலாயிற்று. இதனைச் செந்தமிழில் வெளியிட்டுதவிய பத்திராதிபர்களுடைய அன்பு பாராட்டற்பாலது.

சென்னை,
18—8—1932.

இங்ஙனம்,
வே. சாமிநாதையர்.

---

உ

கணபதி துணை.

# பழனிப் பிள்ளைத்தமிழ்.

---

## சிவனடியார் வணக்கம்.

வேண்பா.

1. போற்றவருந் தென்பழனிப் புண்ணியவே லாயுதன்மேற்
சாற்றரிய பிள்ளைத் தமிழ்கூற—நாற்றிசையும்
கண்டு வணங்கும் கணபதியின் ருதைதிருத்
தொண்டர்கண்மெய்ப் பாதந் துணை.

## நூல்.

### 1. காப்புப் பருவம்.

2. பூமேவு நூற்றிதழ்த் தாமரைத் தவிசில்வளர்
பூமங்கை புவிமங்கையும்
பூசித்த திருவாவி னன்குடித் தலைவனைப்
புகழ்பெற்ற கருணையானைத்
தேமேவு வெட்சியந் தாமனைக் குழகனைச்
சேயினைச் சிவன்மதலையைச்
செவ்வேளை வளர்பழனி நகரில்வரு சிவகிரித்
தேசிகனை யினிதுகாக்க
நாமேவு முரசகே தனனுள மகிழ்ந்திடக்
காந்தாரி யின்றெடுத்த
கவுரவர் பிரானிடந் தூதுபோய் மீண்டுவரு
மால்சிவந் திடமுன்னமோர்

---

குறிப்புரை.

2. வெட்சியந்தாமன்:" வெட்சிமலர்த்தாமா "(18.) குழகன்-இளையவன்; "என்றுமிளையாய்" (பழம்பாடல்.) சிவகிரி-பழனியிலுள்ளமலை. முரசகேதனன்-தருமபுத்திரன். கவுரவர்பிரான்-துரியோதனன்.

பாமேவு கவிஞனுக் கருள்சார் தன்பினொடு
பாய்சுமந் தெய்த்துவந்து
பாலாழி மீதிலே யறிதுயி லமர்ந்தருள்
பசுந்துழாய்க் கரியமுகிலே. (க)

3. வித்தக மிகுந்ததிறல் வேற்படை விசாகனே
விளங்குமோ காரவாசி
மேல்வந்த ராவுத்த னேச்சா வணத்தில்வரு
மெய்யான தனிநாதனே
உத்தமனே வெற்றியஞ் சேவலங் கொடிவிரு
துயர்த்தவனே யாறுமுகனே
உயர்பழனி நகரில்வரு சிவகிரியின் முருகனே
யுவந்தினிது மேற்புரக்க

---

கவிஞனென்றது, திருமழிசையாழ்வாரை. திருவெஃகாவிற் கோயில் கொண்டெழுந்தருளிய பெருமாள், "கணிகண்ணன் போகின்றான்" என்ற திருமழிசையாழ்வார் செய்யுளைக்கேட்டுத் தம்முடைய பாம்புப்படுக்கையைச் சுருட்டிக்கொண்டு அவருடன் சென்றனரென்பது இங்கே சுட்டப்பட்ட வரலாறு; இதன் விரிவைத் திருமழிசையாழ்வார் சரித்திரத்தால் உணரலாகும்; "ஆடாவத், தாழ்பாய லாளரைநீ தானே தொடர்ந்தாயோ, சூழ்பாயோ உன்னைத் தொடர்ந்தாரோ" (தமிழ்விடுதூது, 92-3); "பணிகொண்ட முடவுப் படப் பாய்ச் சுருட்டுப் பணைத்தோளெருத்தலைப்பப், பழமறைகண் முறையிடப் பைந் தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங்கொண்டலே" (மீனாட்சியம்மைபிள்ளைத் தமிழ்;) "முற்றாத காஞ்சியினு முல்லையினும் பாலையினும், கற்றான்பின் சென்ற கருணைமால்" (தனிப்பாடல்.) எய்த்து-இளைத்து. பழனிமலை சிவகிரியென வும் வழங்கும்; "பழனிச் சிவகிரி தனிலுறை கந்தப் பெருமாளே" திருப்புகழ், 150.

3. வேற்படை—வேலாயுதம். ஓகாரவாசி—மயில்; வாசி—குதிரை; இங்கே ஊர்தி. மயில் பிரணவவடிவமென்று கூறப்படுதலின் இவ்வாறுகூறினர்; "ஓகார பரியின்மிசை வருவாயே", "ஆன தனிமந்த்ர ரூபநிலைகொண்ட தாமெயி லென்ப தறியேனே" (திருப்புகழ்.) ராவுத்தன்—குதிரைவீரன்; "ராவுத்த ராயன்", "இனிமைகூர் திராவுத்தற்கு, நன்மைகூர் வரிசைத் துகில் நல்குவம்", "கொன்றை மாலைக் குதிரை யிராவுத்தன்" (திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம், 28: 83, 86; 46: 28); "சூர்கொன்ற ராவுத்தனே", 'இடிக்குங் கலாபத் தனிமயி லேறு மிராவுத்தனே' (கந்தரலங்காரம், 37, 50).

மத்தளி வயிற்றிப முகத்தெம் பிரான்கதிர்கள்
மாறுத சுடர்களிருவர்
மலர்மங்கை மாரிருவர் சத்தமா தாக்களிம
வான்றரு மடந்தைமற்றைச்
சித்தர்வித் யாதா ரியக்கர்கின் னரர்முனிவர்
திசைமுகப் பிரமதேவர்
தேவர்கோன் முதலாய முப்பத்து முக்கோடி
தேவர்க்கு முதலாளியே. (௨)

வேறு.

4. அயனரு மறைமுனி வாரம ரர்கடொழ
அருடரு மானிட மருவிசைப் பாட்டினள்
அமுதினு மினிதெனு நிலைதரு மொழிபெறும்
அழகுயர் வடிவின ளிளமுலைக் கோட்டினள்
அடியரை யணுதின மனதினி வினிதுற
அருள்பெற வளவிய விருவிழிச் சூட்டினள்
அறுசம யமுமொரு வழிபட நிலமிசை
அவரவர் பாவக லருடனைக் காட்டினள்
இயலிசை யுடனொரு சதுமறை சுதிதர
இதுநல மெனநட மிடுமுறைக் கூத்தினள்
இடியென வலறிய மயிடனை யுடல்பொடி
யெனவிடு படையின ளுலகினைக் காப்பவள்
இகபர மெனுமிரு தொழிலுடை யவளென
எவர்களு மறிதரு கருணையைப் பூட்டினள்
இடமுயர் வடகிரி யலமா வெதிர்வரும்
இமகிரி தருமொரு கவுரியைப் போற்றுதும்

மத்தளி—மத்தளம்; "மத்தளி" (பெரியாழ்வார் திருமொழி, 3. 4: 1.) சுடர்களிருவர்—சந்திர சூரியர். முதலாளி—முதல்வன்; என்றது சிவபெருமானை.

4. விழிச்சூட்டினள்—சூட்டுவிழியினளென மாற்றிக்கொள்க. வடகிரி—மேரு. வடகிரியையும் இமகிரியையும் இங்ஙனமே பின்பும் சேர்த்துச்சொல்லுவர்; "வடகிரியு மிமமலையும்" (12.)

கயமுக னுடனரி முகநிரு தனையொரு
கணமதில் விழவெகு சமாமிட் டார்த்திடு
களமிசை யலகைகள் கழுகுண நிணமருள்
கதிரொழு கியவயின் முருகனைக் கார்த்திகை
கனதன மொழுகிய பயநுகர் துகிர்நிற
அதரனை விதான முடையனைச் சீர்ப்பிடி
கணவனை வனமகள் முலைமுக டுழுதருள்
புயமலை நிருபனை யறுமுகச் சேப்பனை
மயன்மகள் கலவியை மதுவினி லளியென
மனமுறு மிருபது புயனையட் டார்ப்புறு
மனுகுல முறையா சுரிமைகள் செயவரு
மணிநிற வரிமகிழ் மருகனைக் கோட்டிள
மதிதட வியநெடு மதின்முக டளவிய
வரிசையி னடமிடு பாதமெய்க் கூத்தின
மயிலின முலவிய பழனியில் வளர்சிவ
கிரிதனின் மருவிய குமரனைக் காக்கவே. (௪)

---

## 2. செங்கீரைப் பருவம்.

5. வண்டாட நறவூறி மணமீறு மணிநீப
மாலையாடக்குழைகள்சேர்
மகாகுண் டலமாட வச்ரகே யூரமுடன்
மார்பிற் பதக்க மாடக்

---

அரிமுகநிருதன்-சிங்கமுகாசுரன். சமாமிட்டு-போர்செய்து. அயில்முருகனை; அயில்-வேல். பயம்-பால். துகிர்-பவழம். சீர்ப்பிடியென்றது தெய்வயானையம்மையை. வனமகள்-வள்ளிநாயகி; "வனமடந்தை" (17) என்பர் பின். சேப்பன்-செந்நிறமுடையவன்; சேப்பு-சிவப்பு; "காப்புடையா ரமரர் மணி மகுடகோ டிகளுரிஞ்சிக் கழற்கால் சேக்குஞ், சேப்புடையார்" (திருவாப்பனூர்ப்புராணம், கடவுள். 4.) மயன்மகள்-மண்டோதரி. இருபது புயனை-இராவணனை. கோடு-வளைந்த பக்கம்; "இருகோட் டொருமதியெழில் பெற விலைச்சினை" (நக்கீரர் திருவெழுகூற்றிருக்கை.) கூத்தின-கூத்தையுடைய.

5. மணி-அழகு, நீபமாலை-கடம்பமாலை, கேயூரம்-தோள்வளை,

கொண்டாடு நெற்றியிற் சுட்டியா டக்கரிய
கொந்தளக் குஞ்சியாடக்
கோலநெடு வான்முகடு தொடுகடற் றிவலைபோற்
குறுவெயர் முகத்திலாடக்
கண்டாடு மதாங் குவிந்தாட மாற்றேறு
கனகத் திழைத்த வரைஞாண்
கதிர்விரித் தாடநவ மணியினாற் செய்தவிரு
காலிற் சதங்கை யாடத்
திண்டாடு மசுரரைக் கொல்லவரு தீரனே
செங்கீரை யாடியருளே
திருமருவு பழனிவளர் சிவகிரியின் முருகனே
செங்கீரை யாடியருளே. (ரு)

6. பொற்றுகடுரிஞ்சிய மணிக்கலச நீர்கொண்டு
புனலாட்டி யுச்சி மோந்து
புல்லிவா யதாமு முந்திசெவி நாசியிற்
புனலேறி டாமலூதிப்
பற்றிய நிலப்பொட்டு நெற்றிமிசை யிட்டழகு
பாரித்த பட்டாடையாற்
பண்புறைய வீரம் புலர்த்திநவ மணியிட்ட
பருமணிச் சுட்டிகட்டி
நற்றமிழின் முனிபாவு குருவென்று தாலாட்டி
நறுவசம் பூறலூட்டி
நற்றாயி னிளமுலைப் பாலமுத மூட்டியிள
நலநிலவு போல்விளங்கச்

---

திண்டாடும்: "திண்டாடித் திசையறியாமறுகினர்" கம்ப. அட்ச. 39.

6. உரிஞ்சிய–அழுத்திய. புல்லி–தழுவி. நிலப்பொட்டை நெற்றிமிசை யிடல்; "நீராட்டி யிணைக்கணுந்தி நீரூதி, நேயத்துகிலின் மெய்துடைத்து நெகிழ்மென் முலையோ டுறத்தழுவி, வாயிற் றிவலை கொடுதேய்த்து மண்பொட் டணிந்து நீறிட்டு" (பிரபுலிங்கலீலை, மாயையுற்பத்தி, 46); "பாரிழைத் தொருபொட்டு, நுதன்மதிக்கிட்டு" (அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ், செங்கீரைப். 4.) நற்றமிழின்முனி–அகத்தியமுனிவர்; இவருக்கு உபதேசித்தது: 13; "அருமறையா கமமங்க மருங்கலைநூ றெரிந்த அகத்தியனுர்க் கோத்துரைக்கு மருட்குருவாங் குருவை" (சிவஞானசித்தியார்.) வசம்பூறல்–வசம்பின்சாறு. இளநலம்–இளமையழகு; "மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி" முருகு. 290.

சிற்றிடைச் செவிலிய ரழைத் துவகை கூரவே
செங்கீரை யாடியருளே
திருமருவு பழனிவளர் சிவகிரியின் முருகனே
செங்கீரை யாடியருளே. (௨)

7. புன்னையர் தா து று மலர்க்காவி லஞ்சிறைய
பொறிவண்டு மகரந்தமார்
பூமணந் தன்னையுண் டின்னிசை முழக்கவம்
போருகத் தடைகிடக்கும்
மின்னிறப் பேட்டனந் தன துசினை யென் றுபோய்
வெள்வளையின் முத்தெடுத்து
மெல்லணை கிடத்தியே சிறகிட் டணைத்திடவும்
மேதியின் கன் று துள்ளிக்
கன்னலைச் சாடிவிளை யாடவுந் தோகைகார்
கண்டுநட னம்புரியவும்
கண்டபழ னத் துழல் பானண்டு நன்றெனுங்
கயறுவி யெதிரேறிடும்
செந்நெல்சூ ழா றுமுக நதியுடைய வள்ளலே
செங்கீரை யாடியருளே
திருமருவு பழனிவளர் சிவகிரியின் முருகனே
செங்கீரை யாடியருளே. (௩)

---

## 3. தாலப் பருவம்.

8. கங்கைக் கொருமா மகனே குகனே கனியே கண்மணியே
கருணா லயமே மறையோர் தவமே கருதும் பெருவாழ்வே
திங்கட் சடிலன் மகிழுங் குருவே தேவர்கள் பணிகோவே
தெய்வச் சுருதிப் பொருளே பொருளின் றெளிவே களிகூரும்

---

7. சிறைய–சிறகையுடைய. கன்னல்–கரும்பு. பால்நண்டு–ஒருவகை நண்டு. ஆறுமுகநதி–ஷண்முகநதி.

துங்கப் புயனேர் திருமான் மருகா சோதிச் சுடரொளியே
தோகைக் குடையாய் நீபத் தொடையாய் சொல்லுக் கினியானே
சங்கத் தொருவா பழனித் தலைவா தாலோ தாலேலோ
தமிழா லுயருஞ் சிவமா மலையாய் தாலோ தாலேலோ. (௮)

வேறு.

9. குவளைக் கருங்கட் கடைசியர்கள் குடித்துக் களித்துக் கள்விலக்குக்
குவையல் குவைய லாக்குவித்துக் கூட்டி மணிநித் திலமளந்த
பவள வள்ளர் தணையிடுக்கிப் பரிவி னுடனே குரவைபல
பாடு மிசையான் மள்ளர்குழாம் பகட்டுக் கழுத்திற் பரம்பிணக்கித்
துவள வுழுத கருஞ்சேற்றிற் றுலங்க விளைந்த செஞ்சாலித்
தொகையுங் கரும்பு முத்தினச் சோதிப் பிறைபோற் பணைதொறுந்
தவளங் கொழிக்குந் திருப்பழனித் தலைவா தாலோ தாலேலோ
சைவந் தழைக்கப் பிறந்தருளுஞ் சதுரா தாலோ தாலேலோ

வேறு.

10. தகரிற் பரியினின் மயின்மிசை பவனிகள் வருவாய் த
சதுரிற் றுறைபல நிறுவிய மறைதொழு சரணு
புகரைக் குருவெனு நிருதரை விறல்கொளு நிபுண
புதனைப் பெறுமதி நிலவிய சடையினன் பாற்

8. தோகைக்குடையாய்-மயிற்கலாபத்தைக் [illegible]
சொல்லுக்கினியானே: "பேசப்பெரிது மினியாய் [illegible] நின்
தொருவா: முருகக்கடவுள் தமிழ்ச்சங்கத்தே [illegible]
இறையனாரகப்பொருள் உரையால் அறி [illegible] தேசிகன்
றலைமைப் புலவா தாலோ தாலேலோ" (முத்து [illegible] (௮)
சிவமாமலை-சிவகிரி, பழனிமலை.

9. குவையல்-குவியல். பகடு-எருது. [illegible]
பலகை. சாலி-நெல். பணைகள்-வயல்கள். [illegible] வள்ளிமலை
பிறந்தருளுமென்றது, திருஞானசம்பந்தமூர்த்[illegible]
நினைந்து கூறியது; "கூனினைத் தீர்த்தினிய கூ[illegible]
செய்தவிவன்", "மதுரைப் பதியி லரசுபுரி மா[illegible] பிழைமாக்கும் குமர முத்தர்
சமணர் மனையன்று" (22,28) என்பர் பின்னும். [illegible]

10. தகர்-ஆட்டுக்கிடாய். பரி-குதிரை. சது[illegible] பவற்றை ஏற்பக்கொள்க.
வடியுடையோய். புகர்-சுக்கிரன். விறல்கொளும்-[illegible]

குகனைத் துணையெனு மரிமன மகிழ்தரு மருகா தாலேலோ
குலவிப் பலபல திசையினு மிசைபெறு குமாரா தாலேலோ
பகரற் கரியன பொருடமிழ் முனிபெற வருள்வாய் தாலேலோ
பழனிப் பதிவளர் சிவகிரி மருவிய முருகா தாலேலோ. (௰)

---

### 4. சப்பாணிப் பருவம்.

11. அரியமறை முடியினுறை யுபநிடத நிலைதெரியும்
அந்தணர்க ளாசிகொட்ட
ஆவலங் கொட்டநின் றயிராணி கேள்வன்முத
லமராுள முவகைகொட்டப்
பெரியநா யகியெனு முமைத்தாய் மகிழ்ச்சியொடு
பேரின்ப முறுவல்கொட்டப்
...ற்றன கலைமங்கை மகதியா ழிசையொடும்
பேர்பெற்ற மொழிகள்கொட்ட
செங்நெல்சூ ...ன்குடைச் சிலைவேள் பணிந்துநின்
செ... கியே துதிகள்கொட்ட
திருமருவு ... கயி லாசபதி முத்தமிட்
செங்கீ... த் தொலிகள்கொட்டத்
... நெஞ்சுபறை கொட்டவே
3. ... காட்டியருளே
... வவரு பழனிமலை முருகனே
8. கங்கைக் கொருமா மக... காட்டியருளே. (௧)
கருணை லயமே மன...

திங்கட் சடிலன் மகிழ... ராமர்தோழன்.
தெய்வச் சுருதிப் ... க்கூற. ஆவலங்கொட்டல் - வாயைப்பொத்திக்
அயிராணி-இந்திராணி. பெரியநாயகி-பிருகந்
7. சிறைய-சிறகையுள்ள அம்பிகையின் திருநாமம். தரியலர்கள்-பகை
நண்டு. ஆறுமுகநதி-ஷண்முக...

12. நெடுவரைகள் புடைபாவு வடகிரியு மிமமலையும்
நெறுநெறென வயிரமிட்ட
நிகளத்தை மெட்டி மெட் டிப்பொடி படுத்தியொரு
நினைவுகொண் டார்த்தெழுந்து
நிலைபெற்ற கந்ததனை வேரொடு மிடந்துமத
நீர்வழிந் தொழுக வெற்றி
நீள்புழைக் கையதனில் வச்சிரத் தாற்செய்த
நெடியசங் கிலியையேந்திப்

படவரவி னெடுமுதுகி னிடைபாவு புடவிகிழி
படவுமிரு கோட்டிலெற்றிப்
பாய்ந்துதன் னிழலைச் சுளித்துமேற் கொண்டுவரு
பாகனைச் சிறியுதறிப்
பரிதியைக் கனியென்று மேக்குயரு மதிதனைப்
பாற்கவள மென்றுதாவிப்
பகிரண்ட கூடத்தை யெட்டிமைக் காரினைப்
பற்றிப் பிடித்துவாரிக்

குடகுடெனு வேரீரா மொண்டுண்டு கடவிற்
குளித்தழன் றுன்னைமுதுகிற்
கும்பத் தலத்திலிட் டெண்டிசைக வெ
குலாவியசு ரப்படையெலாம்
கொன்றுழக் கிச்சென்று திருநீறி
குடர்தனைச் சிதறியமார்
கூட்டமிடு மினியகற் பகநிழலி
கோபர் தணிர்தறிவுசேர் (க)

---

12. வடகிரியும் இமயமலையும்: 4. நெறு நெ
கோனை, நெறுநெறென வடர்த்திட்ட நிலையும் 
"அசுரர், இறைகளவை நெறுநெறென வெறிய"
"நெறு நெறு நெறுவென" (திருப்புகழ்). நி
"அகளங்கா வுன்ற னயிரா பதத்தின், நிகளங்கா
லாற் சுண்டி; வழக்கு. கந்து-கட்டுத்தறி. ம
"திங்களிறு மாந்தலவத் தீம்பாற் கவளமென் 
வேங்கடமே" திருவேங்கடமாலை, 31.

2

தடவிகட நால்வாய் மருப்புப் பருப்பதத்
தந்தியயி ராவதமுதற்
றந்தியெட் டுந்தாங்கு மூலகைவல மாகவே
தான்வந்து சிவன்மார்பினிற்
சாய்ந்துகைக் கனியினைத் தாவென்று கேட்டிடத்
தந்தோ மெனக்கொடுப்பத்
தயவினுட னேகொள்ளு மீாறு கையினாற்
சப்பாணி கொட்டியருளே
சதுமறைகள் பாவவரு பழனிமலை முருகனே
சப்பாணி கொட்டியருளே. (உ

வேறு.

நறைகம ழிதணிற் கவணெறி பவள்பா
னட்பு மிகுத்தோனே
...பு நலமலி கருணைச் சிவனுமை புதல்வா
நற்றவர் மெய்ப்பேறே
...சடிலற் குரையருள் ... ...
யற்... ...டைத்தோனே
சென்னெல்சூ ... யெனவுற் றருண்மயி லுடையாய்
செ... ...வர் வித்தாரா
திருமருவு ... ...குறுபகை யுடையாய்
செங்கை... ...றைத்தோனே
...ருமகள் மருகா
...ர்த்தாமா

3. ... யானை; எழுவாய்; "கால்கிளர்ந்தன்ன வேழ
8. கங்கைக் கொருமா ... "கடுஞ்சின விறல்வேள் களிறூர்ந் தாங்கு"
...ர்ந்த வெல்போ ரிறைவ" (பரி. 17), "பிணிமுக
கருணா லயமே ம..." (புறநா. 56) என்பவற்றால் முருகப்பெருமான்
திங்கட் சடிலன் ம...பிணிமுகமென்னும் பெயருண்மையும் அறியப்படும்.
தெய்வச் சுருதிப் ... வலம்வர அதன்மேல் தான் ஏறிவந்து; தான்—முரு

7. சிறைய—சிறகையுடைய. எறிபவள்—வள்ளிநாயகி. துணை: "அழகுதுணையே"
நண்பே. ஆறுமுகாதி—ஷண்முக...

குறுமுனி பரவத் தமிழுரை பகர்வோய்
கொட்டுக சப்பாணி
குலவிய பழனிச் சிவகிரி முருகா
கொட்டுக சப்பாணி. (ரு)

---

## 5. முத்தப் பருவம்.

14. மாலிடந் தனின்மேவு முத்துமுயர் வாரண
மருப்பிற் பிறந்தமுத்தும்
மங்கையர் கழுத்து முத் துஞ்சாலி தன்னிடம்
வகைபெற விளைந்தமுத்தும்
கோலமிகு கன்னற் கணுக்கடொறு மேவெண்மை
குன்றாது தோன்றுமுத்தும்
கோகனக முத்துமிப் பியின்முத்து மேலான
குருநிறச் சங்குமுத்தும்
சால்வே வரையினுங் கடலினுஞ் சேற்றினுந்
தரையினும் வானிடத்தும்
தானுலர் துடைபட்டு விலைபடுவ வாகையாற்
சரியென்ப தில்லையதனாற்
பால்மணங் கமழ்தாத் தேன்வழிர் தொழுகுநின்
பவளவாய் முத்தமருளே
பழனிவளர் சிவகிரியில் மருவுகுரு தேசிகன்
பவளவாய் முத்தமருளே. (க)

15, தந்தா வளக்கும்ப மதயானை யெட்டுமே
தாங்கிய நெடும்புவனமேற்
சக்ரவா ளத்தையொன் றுய்ச்சுற்றி வெள்ளிமலை
தன்னைவல மாகவந்து

---

குறுமுனி......பகர்வோய்: "குறுமுனிக்குத் தமிழுரைக்கும் குமர முத்தா தருகவே" திருச்செந்திற்பிள்ளைத்தமிழ்.

14. மால்—மேகம். வாரணம்—யானை, வரை முதலியவற்றை எற்பக்கொள்க, சரி—ஒப்பு.

பிந்தாம லண்டச் சுவர்க்கோடு மட்டினும்
பெரிதுசென் றிரவிமதியைப்
பின்னிடப் பாய்கின்ற கோளரவின் வாயைப்
பிளந்தும்ப ரூரைநாடி
மந்தார வனமீ தூளைந்துசூன் முதிர்கொண்டல்
மந்தார நிலைகண்டுதன்
வன்சிறை விரித்தாடி யல்லோல கல்லோல
மகரநீ ரேழுமுழக்கும்
பைந்தோகை யம்பரியி லேறிவரு சேவகன்
பவளவாய் முத்தமருளே
பழனிவளர் சிவகிரியின் மருவுகுரு தேசிகன்
பவளவாய் முத்த மருளே. (உ)

வேறு.

16 கன்னங் கறுத்த குழல்செருகிக்
கடைசி மடவார் கழனிதொறும்
கதித்து விளைந்த செஞ்சாலிக்
கதிரை யரிவாள் கொடுகொய்து
சின்னஞ் சிறிய விடைதுவளச்
சென்று வரம்பின் கரையருகிற்
செல்லு மளவிற் பசுஞ்சோலைத்
தேமாங் கனியை யுதிர்த்தெழுந்து
பொன்னி னிறத்த கதலிதரும்
பூவைக் கனியைச் சிதறிமனம்
பொருந்தி வரும்வா ளரங்களிவர்
பொருமு முலையை யிளநீரென்

15. கோடு—சிகரம். மந்தாரம்—மப்பு, மம்மல்; "மழையுமந் தாரமும் வந்தன வாணன்" (தஞ்சைவாணன்கோவை, 99.) அல்லோலம்-பேரோசை. கல்லோலம்—அலை. மகரநீர்—கடல்.

16. பூவையும், கனியையும், இவர்—கடைசியர்களுடைய,

றன்னித் தாவிப் பிடித்திடுநூ
றாரா முத்தந் தருகவே
உயரும் பழனிச் சிவகிரிவா
யுறைவாய் முத்தந் தருகவே. (கூ)

---

## 6. வருகைப் பருவம்.

17. கந்தா வருக கயவனிதை கணவா வருக வனமடந்தை
காந்தா வருக விரைகொழிக்குங் கடம்பா வருக கடவுளர்கள்
சிந்தா குலங்க டவிர்க்கவந்த சேயே வருக மறைதுதிக்கும்
தேவே வருக பெரியவுமை செல்வா வருக செகத்திலின்பம்
தந்தாய் வருக தவம்புரிவோர் தவமே வருக வைகாவூர்த்
தலைவா வருக வோராறு சமயா வருக சரவணத்தில்
வந்தாய் வருக சிவனருள்கண் மணியே வருக வருகவே
வளஞ்சேர் பழனிச் சிவகிரிவாழ் வடிவேன் முருகா வருகவே.

18. சீரார் நலஞ்சேர் பூவுலகிற் றேவா சுரரின் மற்றையரிற்
றினமு முனது கொலுக்காணச் செல்லா தாரார் திறைவளங்கள்
தாரா தாரா ருனதுபதந் தனையே வணங்கித் தொழவேண்டித்
தழுவா தாரா ரெவ்வேளை சமயங் கிடைக்கு மெனநினைந்து
வாரா தாரா ருனதருளை வாழ்த்திப் புகழ்ந்து துதிக்கமனம்
வசியா தாரார் பணிவிடைகள் வரிசைப் படியே நடத்தாதார்
ஆரா ரெனத்தா லாட்டுகின்ற வரசே வருக வருகவே
அருள்சேர் பழனிச் சிவகிரிவா ழையா வருக வருகவே. (உ)

---

நூறார்: இவை பழனியாண்டவர்க்குரியவை; "இவனும் நூறான்" (21), "நூறாரும்" (30) என்பர் பின்.

17. கயவனிதை-தெய்வயானை. காந்தா-கணவனே. சிந்தாகுலங்கள்-மனக் கவலைகளை. பெரியவுமை-பெரியநாயகி. வைகாவூர்-பழனி.

18. கொலு-திருவோலக்கம். ஆர் என்பது ஒருவரும் இலரென்னும் பொருளில் வந்தது. திறைவளங்கள்-காணிக்கையாகச் செலுத்தும் பொருள்கள். வசியாதார்-கைவசஞ்செய்யாதவர்கள். ஆராரெனத் தாலாட்டுகின்ற: பெண்கள் தாலாட்டுகையில் "ஆராரோ ஆரிரரோ" எனக் கூறித் தொட்டிலை அசைத்தல் வழக்கம்; "ஆராரா ரென்றுதா லாட்டினன்" விறலிவிடு. 178.

19. பொன்னே வருக பொன்னரைஞாண் பூட்ட வருக சிறுசதங்கை
புனைய வருக மணிப்பதக்கம் பூண வருக தவழ்ந்தோடி
முன்னே வருக செவிலியர்கண் முகத்தோ டணைத்துச் சீராட்டி
முத்த மிடற்கு வருகவெதிர் மொழிகண் மழலை சொலவருக
தன்னே ரில்லா நுதற்றிலதந் தரிக்க வருக விழியினின்மை
சாத்த வருக மேலாகத் தானே வருக தேவர்தொழு
மன்னே வருக மாமாலின் மருகா வருக வருகவே
வளஞ்சேர் பழனிச் சிவகிரிவாழ் வடிவேன் முருகா வருகவே.

---

## 7. அம்புலிப் பருவம்.

20. மாகமுயர் சந்த்ரனீ தெய்வவா ரணவனிதை
மகிழுஞ்சு சந்த்ர னிவனும்
மதிசேர் மதிப்பிள்ளை நீயிவன் சிவன்மனது
மகிழ்சம் மதிப்பிள்ளைநீ
தேகவொளி மீறியகு பேரனிவன் மலைவந்து
தெண்டனிட விலகுபேரன்
திருமருவு மிருகோட் டிளம்பிறை நீயெழில்
சேர்ந்தருள் கடம்பிறையிவன்
பாகமுயர் கின்றவெண் சசியுநீ பொன்னாடர்
பரவுசசி மருகனிவனும்
பார்மீது புகழ்பெற்ற சோதிநீ யிவனும்
பரஞ்சோதி வடிவனாகும்
ஆகையா லிவனுநீ யுஞ்சரிச மானமே
யம்புலீ யாடவாவே
அருள்பரவு பழனிவளர் சிவகிரியின் முருகனுட
னம்புலீ யாடவாவே. (க)

---

20. சுசந்த்ரன்-களங்கமற்ற நல்ல சந்திரன் சம்மதி-உடன்பாடு. குபேரன்-சந்திரன்; விகாரமான உடலையுடையவன். பேரன்- குறிஞ்சி வேந்தனென்னும் திருநாமத்தையுடையவன். கடம்பு இறை. சசி-சந்திரன், இந்திராணி; சசியுமென்பதிலுள்ள உம்மை அசைநிலை.

21. ஓதரிய கலைகள்பதி னாறுமாத் திரமுனக்
குண்டுகலை யறுபத்துநான்
குடையனிவ னேரூர னீயிவனு நூறூரான்
உன்றிகிரி யிரவுசெல்லும்

சேதிபெற வேயிவன் றிகிரியெப் போதுமே
செல்லுமிது வல்லாமலே
தேய்வதுஞ் சிறிதுநாள் வளர்வது முனக்குண்டு
சிந்தையி லிவன்பதத்தைப்

போதுகொ டருச்சித்த பேர்களுந் தேய்வுறுர்
பொல்லாத மறுவுடையனீ
பூமிவா னகமுள்ள கடவுளரின் மறுவிலாப்
புனிதனிவ னாகுமென்பார்

ஆதலா லிவனுனக் கதிகனா மென்றிவனெ
டம்புலீ யாட வாவே
அருள்பாவு பழனிவளர் சிவகிரியின் முருகனுட
னம்புலீ யாட வாவே. (உ)

22. வானிடை வழிக்கொண்டு நீசெல்லு மளவைதனின்
மாசுணப் பகைதொடருமம்
மாசுணப் பகையைத் துரத்தவிவ னேறிவரு
மயிலின் சகாயமுண்டு

கூனினைத் தீர்த்தினிய கூடலார் கோமான்
குளிர்ந்திடச் செய்தவிவனின்
கூனைத் தவிர்ப்பனீ வாவேணு மிவனிடங்
குறுகினாற் பலனுமுண்டாம்

---

21. ஊர்-பரிவேடம். நூறூரான்: 16. சேதி-செய்தியென்பதன் மரூஉ; வழக்கு; சேதித்த லெனலுமாம். திகிரி-மண்டிலம், ஆஞ்ஞாசக்கரம். போது-மலர். மறு-களங்கம், குற்றம்.

22. மாசுணப்பகை-இராகுவாகிய பகைப்பாம்பு. கூடலார் கோமான்-பாண்டியன். வேணும்: "வேணுமாகில் வேணுமன்றி" வில்லிபுத்தூராழ்வார் பாரதம், சூதுபோர். 165.

நானினஞ் சொல்வதேன் வாராத போதிலுனை
நாடிப் பிடித்துலர்த்தி
நனிவீர பத்திரன் றேய்த்ததென வேவூன
நல்காத வண்ண மேசென்
றூனிடையின் மருவுவா னுபதேச குருவினுட
னம்புலீ யாடவாவே
அருள்பரவு பழனிவளர் சிவகிரியின் முருகனுட
னம்புலீ யாடவாவே. (க)

---

## 8. சிறுபறைப் பருவம்.

23. ஐவகை யிலக்கணமு மைங்காவி யத்துறையு
மாராய்ந்து பாகமுறையால்
ஆசுமது ரஞ்சித்ர வித்தார முஞ்சொலு
மருங்கவிஞர் துதிமுழக்க
மெய்வருந் தவமுனிவர் முள்ளரைய நெடுநாள
வெண்ணளின வாதனத்தின்
மேவுநா மகள்கொழுந னுடன்வந்து தானின்று
வேதவொலி யேமுழக்கக்

---

வீரபத்திரன் தேய்த்தது தக்கயாகசங்காரத்தின்பொழுது. ஊனம்-குறைவு. ஆனிடையின் மருவுவான்-சிவபிரான்.

23. ஐவகை இலக்கணம்-எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்பன. ஐங்காவியம்-சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டலகேசி, வளையாபதி என்பன. பாகம்-செய்யுளின் நடைவகை; இது, க்ஷீரபாகம், திராக்ஷாபாகம், கதலீபாகம், இக்ஷுபாகம், நாளிகேரபாகம் முதலாகப் பல வகைப்படும்; "பான் முந்திரிகை வாழைக் கனியாய்க், கிளர்ந்தகரும் பாய்நாளி கேரத்—திளங்கனியாய்த், தித்திக்குந் தெள்ளமுதாய்த் தெள்ளமுதின் மேலான, முத்திக் கனியேயென் முத்தமிழே" (தமிழ்விடுதூது, 68–9.) முள் அரைய-முட்கள் பொருந்திய அடியையுடைய. நாளம்-தண்டு.

கைவரும் வழியிலே மனதுவர மனதின்வழி
கண்வரத் தந்திமீட்டும்
கந்தருவர் வீணையிசை யாழிசை முழக்கவான்
கடவுளர்கண் மலர்கள்பெய்து
தெய்வதுந் துமியொடு வலம்புரி முழக்கநீ
சிறுபறை முழக்கியருளே
திருவாவி னன்குடிப் பழனிமலை முருகனே
சிறுபறை முழக்கியருளே. (க)

24. கார்கொண்ட தண்டலை நெருக்கத்தி னிளமஞ்ஞை
கவினுலவு தோகையுதறிக்
கண்ணுறச் சிறைவிரித் தாடவிள மாந்தளிர்
கறித்துமென் குயில்கள்பாடத்
தார்கொண்ட வஞ்சிறைப் பாட்டளிக ளொருகோடி
தாதுண்டு பண்ணிசைகொளத்
தாழுங் குடக்கனி யுதிர்க்கின்ற சூன்மந்தி
தண்கமுகின் மீதிலேறும்
ஏர்கொண்ட பழனத்தி லாலைவாய்ப் பாலடு
மிளங்கோல மள்ளர்மடவார்
இசையினுற் குரவைகண் முழக்கவே மருதநில
மெங்குமுயர் வளமைவீறும்
சீர்கொண்ட தருமவை காபுரிக் கிறைவனே
சிறுபறை முழக்கியருளே
திருவாவி னன்குடிப் பழனிமலை முருகனே
சிறுபறை முழக்கி யருளே. (உ)

---

தந்தி-நரம்பு. வீணை வேறு, யாழ் வேறு; "வேய்ங்குழல் விளிகொள் நல்யாழ் வீணையென் றினைய நாண" கம்ப. அரசியல், 3.

24. தண்டலை-சோலை. ஒரு கோடி யென்றது பன்மையைச் சுட்டியது. இங்ஙனம் வருவதை அனந்தவாசி யென்பர் தக்கயாகப்பரணி யுரையாசிரியர். குடக்கனி-பலாப்பழம். மள்ளரும் மடவாரும். குரவைகள்-குரவைப்பாட்டுக்கள். வைகாபுரி-பழனி.

வேறு.

25. குசைகொடு மறையோர்தொழவருள் புரிவோய்
குணதர வித்தகனே
குலவிய புகழ்சேர் பெரியவள் புதல்வா
குடவயி றற்கிளையாய்
புசபல முடனே வருமசு ரரையே
பொருத திறற்படையாய்
புதமிகு பொதியா சலமுனி பணிவோய்
புதுமை மிகுத்தவனே
இசைபெறு மதுரா புரிவரு புலவோ
னிசையை வளர்ப்பவனே
இமையவர் பதிமான் மகளிரை மகிழ்வோய்
எழில்பெறு கட்டழகா
திசைமுகன் முதலோர் பரவிய குழகா
சிறுபறை கொட்டுகவே
சிவகிரி முருகா குருபர குமரா
சிறுபறை கொட்டுகவே. (௫)

---

## 9. சிற்றிற் பருவம்.

26. பருமுத் தரிசி தனையாய்ந்து
பசுந்தே னதனை வடித்தெடுத்துப்
பவழக் குடத்தி னுலையேற்றிப்
பரிவு தரும்பாற் சோறுக்கி

---

25. குசை-தருப்பை. பெரியவள்-பெரியநாயகி. குடவயிறன்-கணபதி. புதம்-அறிவு. புதுமை மிகுத்தவனே; "பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே" (திருவாசகம்.) புலவோன்-நக்கீரர். இமையவர்பதி-இந்திரன். இமையவர் பதியினுடைய மகளும் மான்மகளும் ஆகிய மகளிரை.

26. முத்தரிசி-முத்தாகிய அரிசியை; "அரிசி முத்தழல் செம்மணி" திருவிளை. நகரப். 64.

ஒருமைப் படியே பூந்தளிரை
ஒன்றாய்ப் பறித்துக் கறிசமைத்தே
உண்ணும் படிக்கிக் குபசரிக்கும்
உரிமைப் பருவத் திளங்கோதைப்
பெருமை மடவார் நாங்களின்று
பிரியத் துடனே வெண்பளிங்காற்
பிரியவகைக்குக் கட்டுவித்த
பெரிய மனையெம் மனையுன்றன்
அருமைச் சிறுகிண் கிணிக்காலால்
ஐயா சிற்றி லழியேலே
அமலா பழனிச் சிவகிரிவாழ்
அரசே சிற்றி லழியேலே. (௯)

27. களப முலைகள் புடைத்தெழுந்த
காலப் பருவத் தனைநினைப்போம்
கட்டி யணைத்துச் சிவனருளும்
கனியே யென்று வாழ்த்தல்செய்வோம்
பிளவு மிலையும் பகிர்ந்துனது
பேரைப் பாடித் துதிசெய்வோம்
பிரியத் துடனே யருகிருத்திப்
பிரசத் துடனே யமுதளிப்போம்
பழகி யிருந்து மெங்கண்முகம்
பாரா திருக்க வழக்குண்டோ
பாத மலர்கள் சிறுமணலின்
பரல்பட் டழுந்திச் சிவந்திடுமே
அழகு துரையே வைகாவூர்க்
கதிபா சிற்றி லழியேலே
அமலா பழனிச் சிவகிரிவாழ்
அரசே சிற்றி லழியேலே. (௨)

---

27. பருவமென்றது மங்கைப்பருவத்தை. பிளவு-பாக்கின் பிளவு; "வெற்றிலையின் முன்னே வெறும்பிளவை வாயிலிட, நற்றிருவா மங்கை நடப்பளே" (தேரையர் வெண்பா.) இலை-வெற்றிலை. பிரசம்-தேன். அமுது-பால்.

28. உம்பர்க் கிடர்செய் துலகனைத்தும்
ஒன்றாய்த் தனது வசப்படுத்தி
ஒருமை தவறிக் கடுங்கொடுங்கோல்
ஓச்சி நிருதர் புடைசூழ
வம்பத் தனமே மேற்கொண்ட
வலிசேர் சூரன் மனையிதன்று
மதுரைப் பதியி லாசுபுரி
மாற னறியக் கழுவேறும்
தம்பச் சமணர் மனையன்று
தமியேம் யாங்கண் மெய்வருந்தித்
தங்கத் தகட்டாற் செய்தமனை
தானே யறிந்து மறியார்போல்
அம்பொற் றிருத்தா மரைப்பதத்தால்
ஐயா சிற்றில் சிதையேலே
அமலா பழனிச் சிவகிரிவாழ்
அரசே சிற்றி லழியேலே. (அ)

---

## 10. சிறுதேர்ப் பருவம்.

29. இந்திரன் குடைபிடித் திடவழற் கடவுள்வந்
தெதிர்நின்று விசிறிவீச
இயமனுட னிருதிவெண் சாமரைகண் முறைமுறை
யிரட்டவரு ணன்வாயுவும்
சந்திர னுமுடைவாளை யேந்திநின் றிருபுறந்
தாிற்ப வளகைவேந்தன்
தயவினொடு காளாஞ்சி யேந்தவீ சானனிது
சரியென்று முறுவல்கூர

---

28. வம்பத்தனம்-தீக்குணம்; "வள்ளற் றனமென் னுயிரை மாய்க்கும்" கம்ப, நகர்நீங்கு. 62.

29. இரட்ட-மாறிவீச.

மந்திரப் புனல்கொண் டருச்சித்து வேதன்முதல்
மறைமுனிவர் துதிகள்செய்ய
வானகத் தமரர்நறு மலர்பெய்ய மழகதிர்
மறைத்தகார் மழைகள் பெய்யச்
சிந்தனை மகிழ்ந்துநவ மணியினு லொளிர்கின்ற
சிறுதே ருருட்டியருளே
தென்பழனி நகரிவரு சிவகிரியின் முத்தையன்
சிறுதே ருருட்டியருளே. (க)

30. பன்றிமலை பூம்புரை யிடும்பன்மலை யீராறு
பள்ளியா றுறுவேதம்
பாவுமங் கலமெட்டு நூறாறு மேயிசை
படைத்தவை காபுரியினும்
குன்றிடத் தும்பரங் கிரிசெந்தி லாவினன்
குடியே ரகத்தைமுதலாய்க்
குளிர்வளஞ் சேர்சோலை மலையிடத் தும்பரவு
கொள்கையா னுஞ்சுடர்விடும்
வென்றிவேல் கையிற் றரித்தலா னுஞ்சேவல்
விருது துச மேவலானும்
மேலான தெய்வவீ ரமென்று போற்றியுனை
வேண்டிநின் றமரர்வாழ்த்தத்

---

சிந்தனை-மனம்; "சிந்தனை வாக்கிற் கெட்டாச் சிவன்" திருவிளை. வெள்ளையானை. 18. முத்தையன்-முத்துக்குமாரமூர்த்தி.

30. பன்றிமலை-வராககிரி; இதன் முதற்பெயர் மாயாசலமென்பது. வராகமுனிவரென்பவர் சிவபெருமானை இம்மலையிற் பூசித்துப் பேறுபெற்றனர்; அதுபற்றி அவர்பெயரால் இது வழங்கலாயிற்று; (பழனிப்புராணம், பன்றிக்குட்டிக்குப். 22-3.) பூம்புரை: இது பூம்பாறையென வழங்கும்; இது வராககிரியிலுள்ளது; (பழனிப்புராணம், கிரிசிவஸ்தானச். 4.) பன்றிமலையென்பதற்குத் திருவிளையாடற்புராணம் வேறுகாரணம் கூறும். இடும்பன்மலை-பழனிமலைக்கு அருகிலுள்ளது. ஈராறுபள்ளி-பள்ளியென்னும் சொல்லை இறுதியாகவுடைய பன்னிரண்டு ஊர்கள். மங்கலம் எட்டு-மங்கலம் என்னும் சொல்லை இறுதியாகவுடைய ஊர்கள் எட்டு; அவை கோதைமங்கலம் முதலியனவென்பர். ஆறு ஆறு-ஷண்முகநதி. துசம் த்வஜம்-கொடி.

தென்றல்வரை முனிபரவு மெய்ஞ்ஞான தேசிகன்
சிறுதே ருருட்டியருளே
தென்பழனி நகரிவரு சிவகிரியின் முத்தையன்
சிறுதே ருருட்டியருளே. (௨)

31. சொல்லரிய பொன்னுருளை சேர்த்துவயி ரத்தினாற்
சோதிபெறு மச்சிணக்கித்
துய்யகோ மேதகப் பலகையிடை சேர்த்தியே
துலங்குபோ திகைதிருத்தி
நல்லபுது வைடூரி யத்தினால் வேய்ந்தொளிரு
நவமணி குயிற்றியருண
நல்குபவ ழக்கால்க ளூட்டிநீ லச்சட்ட
நாற்பாங்கு மேநிறைத்து
மல்லுலவு தலையலங் காரமுஞ் செய்துநிறை
வரிசையி லலங்கரித்து
மாமேரு கிரிபோல் விளங்கமே லானநின்
மாமனா ரான கருணைச்
செல்வரா மெழில்விசய கோபாலர் வரவிட்ட
சிறுதே ருருட்டியருளே
தென்பழனி நகரிவரு சிவகிரியின் முத்தையன்
சிறுதே ருருட்டியருளே. (௩)

பழனிப்பிள்ளைத்தமிழ் முற்றிற்று.

---

தென்றல்வரை-பொதியின்மலை.

31. போதிகை-தேருறுப்புக்களி லொன்று. குயிற்றி-பதித்து. அருணம்-செந்நிறம். நீலச்சட்டம்-நீலமணியாற்செய்த சட்டங்கள். தலையலங்காரம்-தேரின் மேற்பாகம்; "பொற்றே ரிருக்கத் தலையலங் காரம் புறப்பட்டதே" (அம்பிகாபதிபாடல்.) விசயகோபாலர்-பழனியைச்சார்ந்த பாலசமுத்திரமென்னும் ஊரிலிருந்த ஒரு ஜமீன்தாரென்றும் விசயகிரிதுரையென இவர்பெயர் வழங்கப்படுமென்றும் சொல்லுவர். திருமாலாக உருவகித்து இவரை மாமனாரென்றார்.

637 *கோழரைய காஞ்சிரைதாம் [1]பழுத்தயலே
நிற்பவற்றிற் குறுகா தாங்குக்
காழிலவாங் கொழுங்கதலிக் [2]கனியினைச்சேட்
சென்றருந்துங் கவிகண் மார்க்க
மூழிலவாய்ப் படைத்தபொருள் பிறர்க்குதவா
[3]வுலோபரைநீத் துசித மான
வாழ்வுடையோர் [4]வாழ்மனைச்சென் றமுதருந்திப்
பசிதணிவார் மார்க்க மானும். (௨௨)

638 *வாசமொரு சிறிதின்று யிணரூழ்த்த
செம்மலர்தம் மருங்காய் நிற்பப்
பூசல்வரி வண்டினங்க ணிளிடைப்போய்
வாலிதாம் பூந்தேன் மாந்த
லாசறக்கற் றுணர்த்தறியா ரவைக்களநீத்
தேசெலச்சொல் பவராய் நுண்ணூல்
காசறக்கற் றவர்கழகத் தடைந்துநல
[5]னுகர்பவர்தங் காட்சி மானும். (௨௩)

வேறு.

639 *கருநிறப் பருஉக்காழ்க் களங்கனி வதுளக்
காமர்தீங் கனிகண்மாங் கனிகள்
பெருமிதப் பலவின் [6]கனிகடுற் றியபின்
பீடுலாங் காழிலாக் கனியை
யொருமுகப் படவுண் சுகமுறு சுகமாங்
குபயநூல் களைமுறை முறையே
குருமுகத் துணர்ந்த பின்னர்நான் மறைதேர்
குறிப்பினர் சுகம்பொரு வருமே. (௨௪)

640 ஒருங்களி யிழைத்த விருலுடைச் சுருதே
றணவுசா லோதிம மோதிப்
பெருங்குவ டுழக்க மதியுகு மமிர்தப்
பெருக்கய லெழுவகண் டெழலும்

---

[பி-ம்.] [1]பழுத்தருகே. [2]கனிகளைச். [3]வுலுத்தரைநீத். [4]பொன்மனைச், [5]னுணர்பவர்தங். [6]கனிசுவைத் ததன்பின். மா,

கருங்கொடி தளைப்ப வெழாததன் றிவலை
காமர்வாய்க் கோடல்சிற் றின்பத்
திருந்தவர் சிறிதும் பிணிப்பறா துயர்பே
ரின்பமுந் துய்ப்பதே பொருவும். (உரு)

வேறு.

641 காலையிற்சா ரலினுாவோர் யாகவனி
கத்தமிர்தங் காட்டுந் தூபம்
வேலையிற்செங் கதிர்சயிலத் திடைப்பகல்வை
கலினடைந்த விரைசேர் தூபஞ்
சோலையின்மா லையிற்பிறைபூ கப்பழுக்காய்
சேர்தரச்சேர் தூப மூத்தி
மாலையுநன் பகலொடுகா லையுந்தான
மாறினபோல் வயங்கு மன்னோ. (உசு)

642 ஆற்றினைப்பத் தடுக்கியிரு நான்கினைமேற்
கொண்டதென நவலும் பான்மை
மாற்றுருமா டகப்பசும்பொன் றனையள்ளிக்
கேவணங்கள் வகுத்து நாப்பண்
ணேற்றமுறு மருமணிகள் குயிற்றுபுபே
ரணிதிருமாற் கியற்றும் பான்மைக்
காற்றலமைந் துளதென்று லெம்மலைக்கண்
ணிருப்பாருச் சனைசெய் வாரே. (உஎ)

643 கைம்மலைக்கன் றுதவுமிருள் கான்மலையைக்
களபமுலைக் கமலை தோயுஞ்
செம்மலைத்தாம் வழிபடுதற் கமைந்தவற்றைக்
கரங்களினச் சிலம்பி னோடு
மிம்மலைக்க ணிருந்தியற்று கெனத்தருவுஞ்
சாரியுஞ்சே டரினின் றீயு
மம்மலைக்க ணல்லான்மற் றெம்மலைக்க
ணிருப்பாருச் சனைசெய் வாரே. (உஅ)

644 மேலைவா னவர்க்குதவுங் கற்பகக்கா
மிடைந்தனவாய் விரவி யீன்ற
காலைநாண் மலரிணையந் தணர்திருமாற்
கணிந்துகளைந் திடலும் பாங்கர்ச்
சோலைநாண் மலரினெடுந் துவன்றினவாய்த்
தெழித்துநதி சுழித்தே யோங்கி
மாலையா றெனவொழுகுங் கங்குலுநன்
பகலினுமம் மலைக்கண் ணூளும். (உகூ)

645 தாழ்வரைத்தெள் ளறல்கொழித்த படிகர்முழு
மணிக்குவையுட் டழுவு சாரற்
சூழ்பொழிற்புன் கலர்துணர்விண் டிழிநறைதா
துறச்சுரும்பிற் சுடருந் தோற்றம்
வாழ்மறையோர் பொறிமுகந்திட் டாச்சியமு
மரிசனமும் வழங்குங் குண்டக்
காழ்வயிரக் கனல்கதுவிக் கொழும்புகையிற்
சுடர்கெழுநற் காட்சி மானும். (௩௦)

646 கம்பவா ருதிப்படுக ரிருவரைவா
யிளங்கதிருட் காணு தோட்டி
வம்புலா மலர்ப்பொதும்ப ரள்ளிலைகள்
ளிடையினிருள் வைப்ப நாளும்
வெம்புவான் கடுந்திறனைப் விடநாக
முமிழ்ந்தவிழு மணிகள் யாவுஞ்
செம்பொனு லயமெனவே பகல்பரப்பி
யிருட்பிழம்பைச் சீப்ப தாமே. (௩க)

647 சந்தனத்தண் பொழிலிடையே சண்பகப்பைம்
பொழில்விரவு சயில மார்பில்
வெந்தழற்கட் செவித்துளைப்பற் பணியுமிழ்ந்த
மணிபகற்செய் விளக்க மல்லா

லந்தியிலந் தணர்[1]வழிபட் டருத்தியவா
குதிபருகு மான்ற சோதிச்
செந்தழனள் ளிருடோந்து திருத்தகுபுத்
தேளுலகிற் சிறப்ப தாமே. (௬௨)

**வேறு.**

648 பலாவு மாவுங்கொன் னுகமும் பாடலாய்ப்
பலாவு மாவுங்கொன் னுகமும் பைத்தெழீஇக்
கலாவ மாமயி லஞ்சுகங் காலொளி
கலாவ மாமயி லஞ்சுகங் காட்டுமே. (௬௩)

649 கான கத்தின் கிளைத்துக் கனமணி
கான கத்தின் கிளைத்துக் கனமழை
தான கைத்தலத் தாரிற் றவளமாத்
தான கைத்தலத் தாரிற்பெய் தார்க்குமே. (௬௪)

650 என்று மேக மிசைமதிப் பாகமோ
டென்று மேக மிசைமதிப் பாகவே
யொன்று மாக முழுதலைச் செய்யுமூ
தொன்று மாக முழுதலைச் செய்யுமே. (௬௫)

651 இலங்கொண் மூவெயில் குன்றவில் லேற்றுவா
னலங்கல் வாரி யமைந்திறப் பெய்தவே
ரலங்கல் வாரி யமைந்திறப் பெய்தவே
ரிலங்கொண் மூவெயில் குன்றவில் லேற்றுவான். (௬௬)

652 பிடியி டைச்செல்வ மாதர்க ளிற்றினம்
பிடியி டைச்செல்வ மாதர்க ளிற்றினம்
கடிய வான மடங்கலின் கண்ணுறும்
கடிய வான மடங்கலின் கண்ணுறும். (௬௭)

**வேறு.**

653 நான்றபுழைத் தடக்கைவயக் களிற்றிரைதே
ரடலரிகள் ளிருளிற் றன்கட்
டோன்றுகரித் திரளினைப்பின் றொடர்தலும்பின்
றொடர்பிடிக டுணுக்குற் றந்தோ

[பி-ம்.] [1]வழிப்பட். ச.

வீன்றகயர் தலைப்பிடிகண் டயலிரிய
விரிந்தகரித் திரள்கள் பார்த்
ளான்றபகு வாய்முழைபுக் கவிந்தனவால்
விதியினையா ரழிக்கற் பாலார். (௬௮)

654 *உற்றவயக் களிற்றினொடு பிடியினையாங்
கொருபாந்த ளொருவாய்க் கொள்ளக்
கற்றதுகண் டிருதலைப்புள் ளவற்றிருகை
கவர்ந்தெடுப்பக் கவ்வு காலைப்
பற்குலமுக் [1]கிடருழத்த விழவூழ்வர்
தடியிடுநாட் பசைய தாகப்
பெற்றபொரு ளினைப்[2]போற்றி முதலுமிழர்
[3]திடருழப்போர் பெற்றி மானும். (௬௯)

655 உடுவாழுஞ் செக்கரில்வர் துருவுபிறை
யினைச்சிகாத் துலவுங் கொண்மூத்
தொடுவாழ்வி னெடும்பிளிறிக் குறுந்திவலை
பனிற்றுமதைத் தோட்டி யூன்றி
வடுவாழ்செம் புகர்நெற்றித் தனிமருப்பிற்
குளிறுமதக் களிறென் றேங்க
னடுவாழுங் கரியறைகூய்ப் பணைக்கையினை
யும்பர்மிசை நடத்து மோர்பால். (௭0)

656 புட்டொழுகி யொடுமிரிய நால்வேணு
வெதிர்பொருது பொழிந்த செந்தீ
னெட்டொழுகு படவளைப்ப நடுவணதாங்
கயந்தலையி னிலைமை நோக்கி
மட்டொழுகு மருவியினைப் புழைக்கையா
லுஞ்சிமத வேழம் வெந்தீப்
பட்டொழுக வெறிந்ததைமீட் டிரும்பிடியோ
டதன்முழைபோய்ப் பயிலு மோர்பால். (௭௧)

---

[பி-ம்.] [1]கிடருழத்த நீவினைவர். மா. [2]பேணி. மா. [3]திடருறுவோர். மா.

657 அடியிழுக்குற் றடிவரைவீழ் புனிற்றிளங்கன்
றுறுகொடியார்த் தயனின் றூடப்
பிடியிழுக்குற் றெடுப்பலெனத் துனைவதுகண்
டதனினருள் பெருகி யாங்கக்
கொடிபிடித்துற் றெடுத்துயக்கொள் களிற்றுநிலே
கொடுநரகிற் குறுகு வோரைக்
கடிமலர்க்கட் டிருமகளிற் கருணைபுரிந்
தெடுத்துயக்கொள் கடவுண் மானும். (சஉ)

658 *திரகாயத் திரிகருணைக் கிலக்காகு
முணர்வுடையோர் சித்தி காட்டப்
பாகாயத் திடைபுகுந்து மறித்தொருகா
யம்[1]புகுதும் பான்மை யேய்ப்ப
வுரகாயத் துரிவையுரீஇ யொருபாந்த
ளொருபாந்த ளுரிபுக் கூர்ந்து
வரகாயத் தகடுரிஞ்சும் பஃறலைய
மலேமுழைபோய் வைகு மன்னே. (சங)

659 நீண்டனவா யாழ்ந்தசுனை நீரிடைப்போ
யிருதலையு நிலாய தாகக்
காண்டகுமா சுணங்கிடப்ப பாலமென
நடந்தகரிக் கறைத்தாள் வாய்க்கொண்
டேண்டனதா மெனக்குறிப்பக் கருமுகின்மின்
னுயிர்த்திடவே யொளிர்நே மிக்கு
மாண்டதுபோன் மாண்டதுமா சுணமுயிர்வாழ்ந்
ததுகதறு மதமா மன்னே. (சச)

660 பெரும்புலிக ளீன்றணுமைப் போதினவாங்
குருளைமடப் பிடிக ளீன்ற
வரும்பவழக் குழக்களிற்றி னிரையிடைப்பாய்ந்
திரைகவரு மந்தண் சாரற்

[பி-ம்.] [1]புகுமப். மா.

சுரும்பியிர்கா மூகிற்பொதும்பர்ப் பசும்பொனசும்
பினிலாரணை தோய்ந்து தோன்றப்
பொரும்பகைசால் கோம்பியெனச் சாம்பிமயி
லினமிரிந்து போவ தாமே. (சடு)

661 பொருந்துபருப் பதக்குடுமி நிவர்[1] துழக்கி
முழுமதியின் பூட்சி போழ
மருந்துடைத்துத் தாரையதா யிழிதாவே
வாளரவில் வாலி தாமென்
றருந்துதற்கு வெண்டலைவள் ளுகிர்க்கணைத்தாட்
ககனவெளி யடைக்கும் பந்தர்ப்
பருந்தமிர்தென் றுற்றுணர்த்துஞ் சகோரமுடன்
விருந்தருந்தும் பான்மைத் தாமே. (சசு)

662 உச்சிவான் மலைச்சிகரத் துறுகொடிகள்
படர்பாங்க ருடைய வாகும்
பச்சைவேய்ங் கழைத்தலையிற் சுழல்வனவாய்த்
தோகைநடம் பயிலு நீர்மை
மொய்ச்சலாங் குழற்கழைக்கா ரிகைபாசம்
பூண்டகழை முடிமே னின்றே
விச்சைமே தகப்பவுரி காட்டுவதா
மெனக்கவினு மேன்மைத் தாமே, (சஎ)

663 ஞாலின்மேற் படுபலவின் கனிகடுவன்
கொடுசினைதாழ் காமர் வல்லி
மாவின்மேற் படர்ந்ததன்மேன் மந்திகடம்
வயிற்றிடையே மகவைத் தாங்கித்
தாவினுற் றவறுடைத்தா மெனவருவ
தொடும்பொருள் தன்மை கூத்த
சேவில்வான் கழைக்கயிற்றின் முழவுதழீஇ
யெதிர்நடப்ப தொப்ப தாமே. (சஅ)

---

[பி-ம்.] [1]தழக்கு சா.

வேறு.

664 தேவர்கிம் புருட ரியக்கர்கந் திருவர்
தெய்வமா னிடரெனுந் திரளா
யாவரு மலர்பெய் தவிசமைத் திணங்கி
யிணைவிழைச் செய்துகா லையினிற்
றூவருஞ்சுடர்ப்பொற் பூணுறீஇ யுதிர்ந்த
தமனியப் பொடிகளும் பசுந்தேன்
வீவருஞ் சுடர்ப்பூஞ் சுண்ணமுந் துவன்றி
வெள்ளிடை யிலாமருங் கினவே. (௬௯)

665 மேதக வுடைக்காந் திருவர்கன் கலவி
வேலையா டுதற்குமுன் கழித்த
பீதக வாடை கவர்கவிக் குலங்கள்
பெயர்ந்தரை யுடீஇயதுற் றனரா
யாதக வழிந்த தெனவயர்ந் தொருகை
யாளிரோக் கமைதரா நீட்டப்
போதகங் குழைந்து கற்பகம் புரந்த
பொலந்துகி லறையுடீஇப் பொலிவார். (௭௦)

666 காலமு மிடனு மெய்துகா லையிலே
காந்தமாங் கெய்தலுங் கவராச்
சீலமும் விழியு மொன்றிய திறத்தாற்
றிண்முலைச் சுவட்டொடு புயமு
மாலமர் கடவுள் பரையுடன் கலந்த
தாமெனக் கலத்தலும் பொறித்த
கோலம தழித்த வெயர்வடங் குதற்குக்
கொடுத்தபூஞ் சுண்ணமு மணிவார். (௭௧)

667 புடைபாந் திறவிப் புளகமுற் றெழுந்த
புணர்முலைக் கவயொர் பகமு
மிடையொலி நழைதற் கிடையற நெருங்கு
மெல்லியி னுறுத்தவெண் டாளத்

# மதுரைத்தமிழ்ச்சங்கத்து

## 1931-ம்ஹூ டிசம்பர்மாத வரவு செலவு கணக்கு.

| விவரம். | வரவு 1931 டிசம்பர் | | | வரவு 1930 டிசம்பர் | | |
|---|---|---|---|---|---|---|
| **I General Section:** | | | | | | |
| (1) மாதச்சந்தா வகையில் வரவு ... | 50 | ... | ... | | | |
| (2) சங்கப்பரிக்ஷைகள் சம்பந்த மாசக்கட்டணத்தொகை வரவு | 5 | ... | ... | | | |
| (3) சங்கசாலியிடத்துக்கு மாத வாடகை வரவு ... | 28 | ... | ... | | | |
| மொத்தம் ரூ ... | 83 | ... | ... | 167 | ... | ... |

| விவரம். | செலவு 1931 டிசம்பர் | | | செலவு 1930 டிசம்பர் | | |
|---|---|---|---|---|---|---|
| **I General Section:** | | | | | | |
| (1) சங்கம் மானேஜ்மெண்டாபீஸ் சிப்பந்திகளுக்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 104 | 10 | 8 | | | |
| (2) சங்கக்கலாசாலை உபாத்தியாயர்களுக்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 127 | ... | ... | | | |
| (3) சங்கக்கலாசாலை மாணவர்களுக்குப் போஷணைக்காகச் செல்லாக்கியது ... | 124 | 13 | 4 | | | |
| (4) Stationery contingencies வகையிற்செலவு ... | ... | 10 | ... | | | |

II EDITORIAL SECTION:

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) சங்கத்தின் அங்கத்தினர்களிடமிருந்து சந்தா வகையில் வரவு ... | 14 | ... | ... | | | |
| (2) 'செந்தமிழ்'ப் பத்திரிகைக்குச் சந்தாவகையில் வரவு ... | 12 | ... | ... | | | |
| (3) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் விற்றவகையில் வரவு ... | 119 | 3 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 145 | 3 | ... | 91 | 11 | ... |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (5) தபால், தந்திவகையிற் செலவு | 4 | 8 | ... | | | |
| (6) முனிசிபாலிடிக்கு வரி செலுத்திய வகையிற் செலவு ... | 100 | 1 | 7 | | | |
| (7) சங்கமாபீசு சில்லறைவேலைகள் சம்பந்தமாக அச்சுக்கூலி, பைண்டிங்கூலி வகையிற் செலவு ... | 20 | ... | ... | | | |
| (8) சங்கப்பரீக்ஷைகள் சம்பந்தமாகச் செலவு. ... | 4 | 1 | 6 | | | |
| மொத்தம் ரூ ... | 485 | 13 | 1 | 389 | 1 | 1 |
| **II EDITORIAL SECTION:** | | | | | | |
| (1) ஷை ஆபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 35 | ... | ... | | | |
| (2) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் அச்சிடும் சம்பந்தமாக ஸ்டேஷனரி கண்டின்ஜன்ஸி வகையிற் செலவு. ... | ... | 2 | ... | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| III PRESS SECTION: | | | | | | |
| (1) அச்சுக்கூலி வகையில் வரவு ... | 139 | 8 | ... | | | |
| (2) ஷை அச்சுவேலைகட்காக வாங்கிய காகிதங்கட்குக் கிரையம் வரவு ... | ... | 14 | ... | | | |
| (3) பைண்டிங்கூலி வகையில் வரவு ... | 23 | 14 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 164 | 4 | ... | 187 | 13 | ... |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (3) ஷை புத்தகங்கள் சம்பந்தமாக அச்சுக்கூலி, பைண்டிங்கூலி வகையிற் செலவு. ... | 70 | ... | ... | | | |
| (4) தபால், தந்திவகையிற் செலவானது. ... | 10 | ... | ... | | | |
| மொத்தம் ரூ ... | 115 | 2 | ... | 168 | 7 | 6 |
| III PRESS SECTION: | | | | | | |
| (1) அச்சாபீஸ்சிப்பந்திகளுக்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 100 | 12 | 3 | | | |
| (2) ஷை ஆபீஸ் Stationery Contingencies வகையிற் செலவு. | 11 | 13 | 9 | | | |
| (3) பைண்டிங் ஆபீஸ் சிப்பந்திகளுக்குச் சம்பளம் செல்லாக்கியது | 28 | 6 | 11 | | | |
| (4) ஷை ஆபீஸ் Stationery Contingencies வகையிற் செலவு | 15 | 3 | ... | | | |
| (5) மெஷின்வகையரா ரிப்பேர் வகையிற் செலவு. ... | 8 | 8 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 164 | 11 | 11 | 187 | 15 | 8 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆகமொத்தம் வரவு ரூ ... | 392 | 7 | ... | 446 | 8 | ... |
| மாத ஆரம்பத்திலிருந்த கையிருப்புத்தொகை ரூ ... | 15814 | 10 | 1 | 8977 | ... | 10 |
| ஆகமொத்தம் ரூ ... | 16207 | 1 | 1 | 9423 | 8 | 10 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆக மொத்தம் செலவு ரூ ... | 765 | 11 | ... | 745 | 8 | 3 |
| மாத முடிவில் மீதி இருப்புத் தொகை ரூ ... | *15441 | 6 | 1 | 8678 | ... | 7 |
| ஆகமொத்தம் ரூ ... | 16207 | 1 | 1 | 9423 | 8 | 10 |

*By M. U. C. C. S. Pass Book Rs. 5000- 0- 0

M. R. C. C. Bank Pass Book Rs. 10106-15- 8

Cash on hand Rs. 334- 6- 5

15441- 6- 1

*Audited and found correct,*

V. S. RAMASWAMI,

AUDITOR,

10—8—32.

LAKSHMINARAYANAN,

*Manager,*

MADURA TAMIL SANGAM.

5—1—1932.

உ

# மதுரைத்தமிழ்ச்சங்கத்து

## 1932-ம்ஞு ஜனவரிமாத வரவு செலவு கணக்கு.

| விவரம் | வரவு 1932 ஜனவரி | | | வரவு 1931 ஜனவரி | | |
|---|---|---|---|---|---|---|
| I General Section : | | | | | | |
| (1) நன்கொடைவகையில் வரவு. | 1000 | ... | ... | | | |
| (2) மாதச்சந்தாவகையில் வரவு... | 50 | ... | ... | | | |
| (3) பாங்கில் போடப்பட்டுள்ள தொகைக்கு வட்டிவகையில் வரவு ... | 137 | 6 | 11 | | | |
| (4) சங்கப்பரீக்ஷகள் சம்பந்தமாகக்கட்டணத்தொகை வரவு | 143 | 11 | ... | | | |
| (5) சங்கக்காலியிடத்துக்கு மாத வாடகைவரவு ... | 28 | ... | ... | | | |
| (6) Miscellaneous வரவு ... | ... | 14 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 1359 | 15 | 11 | 280 | ... | 6 |

| விவரம் | செலவு 1932 ஜனவரி | | | செலவு 1931 ஜனவரி | | |
|---|---|---|---|---|---|---|
| I General Section : | | | | | | |
| (1) சங்கம் மானேஜ்மெண்டாபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 120 | ... | ... | | | |
| (2) சங்கக் கலாசாலை உபாத்தியாயர்கட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 127 | ... | ... | | | |
| (3) Stationery, contingencies வகையிற் செலவு ... | 4 | 6 | ... | | | |
| (4) பாண்டியன் புத்தகசாலைக்கு வரும் பத்திரிகைகளுக்குச் சந்தா செல்லாக்கியது ... | 18 | 10 | ... | | | |
| (5) தபால், தந்திவகையிற்செலவு | 2 | ... | ... | | | |

II Editorial Section :

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) 'செந்தமிழ்'ப் பத்திரிகைக்குச் சந்தாவகையில்வரவு ... | 8 | ... | ... | | | |
| (2) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் விற்றவகையில் வரவு ... | 84 | 6 | 6 | | | |
| (3) செந்தமிழ்ப் பழையபிரதிகள் விற்றவகையில் வரவு. ... | 4 | 8 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 96 | 14 | 6 | 160 | 11 | ... |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (6) சங்கமாபீசு சில்லறைவேலைகள் சம்பந்தமாக அச்சுக்கூலி பைண்டிங்கூலி வகையிற் செலவு. | 1 | 12 | ... | | | |
| (7) Miscellaneous செலவு... | 2 | 14 | ... | | | |
| மொத்தம் ரூ | 276 | 10 | ... | 299 | ... | 3 |
| **II Editorial Section:** | | | | | | |
| (1) ஷை ஆபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 35 | ... | ... | | | |
| (2) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் அச்சிடும் சம்பந்தமாக ஸ்டேஷனெரி கண்டின்ஜன்ஸி வகையிற் செலவு. ... | 5 | 6 | ... | | | |
| (3) ஷை சம்பந்தமாக அச்சுக்கூலி பைண்டிங்கூலி வகையிற் செலவு ... | 59 | ... | ... | | | |
| (4) தபால் தந்திவகையிற் செலவு | 12 | 8 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 111 | 14 | ... | 39 | 3 | 9 |

**III Press Section:**

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) அச்சுக்கூலிவகையில் வரவு. | 96 | 8 | ... | | | |
| (2) ஷை அச்சு வேலைகட்காக வாங்கிய காகிதங்கட்குக் கிரயம் வரவு ... | 2 | 8 | ... | | | |
| (3) பைண்டிங் கூலிவகையில் வரவு ... | 22 | 1 | ... | | | |
| மொத்தம் ரூ. ... | 121 | 1 | ... | 166 | 4 | ... |

**III Press Section:**

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) அச்சாபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 110 | 9 | 2 | | | |
| (2) ஷை ஆபீஸ் **Stationery contingencies** வகையிற் செலவு. | 9 | 14 | 6 | | | |
| (3) பைண்டிங் ஆபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது .. | 30 | 3 | 7 | | | |
| (4) ஷை ஆபீஸ் Stationery Contingencies வகையிற் செலவு. | ... | 7 | 3 | | | |
| மொத்தம் ரூ. ... | 151 | 2 | 6 | 173 | 12 | 4 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆகமொத்தம் வரவு ரூ. ... | 1577 | 15 | 5 | 606 | 15 | 6 |
| மாத ஆரம்பத்திலிருந்த கை இருப்புத்தொகை ரூ. ... | 15441 | 6 | 1 | 8678 | ... | 7 |
| ஆகமொத்தம் ரூ. ... | 17019 | 5 | 6 | 9285 | ... | 1 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆக மொத்தம் செலவு ரூ. | 539 | 10 | 6 | 512 | ... | 4 |
| மாதமுடிவில் மீதியிருப்புத் தொகை ரூ. ... | *16479 | 11 | ... | 8772 | 15 | 9 |
| ஆக மொத்தம் ரூ. ... | 17019 | 5 | 6 | 9285 | ... | 1 |

*By M. U. C. C. S.
Pass Bk. Rs. 5000– 0– 0
M.R.C.C. Bank
Pass Bk. Rs. 11294– 6– 7
Cash on hand Rs. 185– 4– 5

16479–11–...

*Audited and found correct.*

**V. S. RAMASWAMI,**

AUDITOR.

10—8—1932.

**LAKSHMINARAYANAN,**

*Manager,*

MADURA TAMIL SANGAM.

5—2—1932.

# மதுரைத்தமிழ்ச்சங்கத்தில் விற்கப்பெறும் புத்தகங்கள்.

## சங்கப்பிரசுரம்.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஞானாமிர்த மூலமும் உரையும் ... ... | 1 | 0 | 0 |
| 2. | சைவமஞ்சரி ... ... ... | 1 | 8 | 0 |
| 3. | யாப்பணியிலக்கணங்கள் ... ... ... | 0 | 10 | 0 |
| 4. | வைத்தியசாரசங்கிரகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 5. | பன்னூற்றிரட்டு ... ... ... | 3 | 0 | 0 |
| 6. | மகாபாரதம் அரும்பதவுரையுடன் ... ... | 4 | 0 | 0 |
| 8. | தமிழ்ச்சொல்லகராதி உயிர்வருக்கம் முடிய. முதற்பாகம். | 6 | 0 | 0 |
| | ஷை இரண்டாம்பாகம் ... ... ... | 4 | 8 | 0 |
| | ஷை மூன்றாம்பாகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 10. | தொல்காப்பியம் செய்யுளியல் (நச். உரை முதலிய) ... | 1 | 12 | 0 |
| 11. | திருவருணைக்கலம்பகம் ... ... ... | 0 | 6 | 0 |
| 12. | அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ் ... ... | 0 | 8 | 0 |
| 13. | கலைசைச்சிலேடைவெண்பா ... ... ... | 0 | 5 | 0 |
| 14. | தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி ... | 1 | 4 | 0 |
| 15. | திருவாரூர் நான்மணிமாலை ... ... ... | 0 | 4 | 0 |
| | பன்னூற்றிரட்டு (செலக்ஷன்) ... ... | 0 | 4 | 0 |
| | திருவாலவாய்த் திருநீற்றுப்பதிகம் முதலியன ... | 0 | 1 | 0 |

## செந்தமிழ்ப்பிரசுரம்.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஐந்திணையைம்பது உரையுடன் ... ... | 0 | 3 | 0 |
| 2. | களவழி நாற்பது (5) இனியதுநாற்பது (உரையுடன்) ... | 0 | 3 | 0 |
| 4. | புலவராற்றுப்படை ... ... ... | 0 | 3 | 0 |
| 6. | நேமிநாதம் (உரையுடன்) ... ... ... | 0 | 12 | 0 |
| *7. | திருநூற்றந்தாதி (உரையுடன்) ... ... | | | |
| 8. | திணைமாலைநூற்றைம்பது (உரையுடன்) ... | 0 | 8 | 0 |
| *9. | அநுமானவிளக்கம் ... ... ... | | | |
| 10. | அட்டாங்கயோகக்குறள் ... ... ... | 0 | 2 | 0 |
| 12.* | பன்னிருபாட்டியல் ... ... ... | | | |
| 13. | நான்மணிக்கடிகை (பழைய உரை) ... ... | 0 | 4 | 0 |
| 14. | முத்தொள்ளாயிரச்செய்யுட்கள் ... ... | 0 | 2 | 0 |
| 15. | திருச்செந்திற்கலம்பகம் ... ... ... | 0 | 3 | 0 |
| 16. | திருவாரூருலா ... ... ... | 0 | 8 | 0 |
| 17. | சுகசந்தர்சனதீபிகை ... ... ... | 0 | 12 | 0 |
| 18. | இயற்கைப்பொருட்பாடம்... ... ... | 0 | 4 | 0 |
| 19. | தேவையுலா ... ... ... ... | 0 | 3 | 0 |
| 20. | நரிவிருத்தம் ... ... ... ... | 0 | 2 | 0 |
| 21. | சிதம்பரப்பாட்டியல் (உரையுடன்) ... ... | 0 | 8 | 0 |
| 22.* | திருக்கலம்பகம் (ஷை) ... ... | | | |
| 23.* | விக்கிரமசோழனுலா ... ... ... | | | |
| 24. | குருமொழிவினாவிடை ... ... ... | 0 | 1 | 0 |
| 25. | கேசவப்பெருமான் இரட்டைமணிமாலை... | 0 | 2 | 0 |
| 26. | திருத்தணிகைத்திருவிருத்தம் ... ... | 0 | 1 | 0 |
| 27. | மதுரைத்திருப்பணிமாலை ... ... | 0 | 8 | 0 |
| 28.* | சந்திராலோகம் ... ... ... | | | |
| 29. | சோழவம்சசரித்திரச்சுருக்கம் ... ... | 1 | 0 | 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| 30. | ஞானாமிர்தக்கட்டளை | 0 | 8 | 0 |
| 31. | பாண்டியம் | 0 | 4 | 0 |
| 32. | மநீஷாபஞ்சகம் | 0 | 8 | 0 |
| 33. | வேளிர்வரலாறு | 0 | 8 | 0 |
| 34. | அகப்பொருள்விளக்கம் | 1 | 4 | 0 |
| 35.* | திருமந்திர நூறுபாட்டுக்குரை | | | |
| 36. | உவமானசங்கிரகம் | 0 | 1 | 0 |
| 37. | மாறனலங்காரம் மூலமும் உரையும் | 4 | 8 | 0 |
| 38. | திருப்புல்லாணிமாலை | 0 | 2 | 0 |
| 39. | பழமொழி மூலமும் பழையஉரையும்(முதல் 100 செய்.) | 1 | 0 | 0 |
| 40. | திருமாலிருஞ்சோலைமலை அழகர்பிள்ளைத்தமிழ் | 0 | 8 | 0 |
| 41. | பொருட்டொகைநிகண்டு | 0 | 6 | 0 |
| 42. | அகராதிநிகண்டு | 0 | 12 | 0 |
| 43. | மேகவிடுதூது | 0 | 2 | 0 |
| 44. | திருக்குற்றாலமாலை | 0 | 2 | 0 |
| 45. | தண்டலையார்சதகம் | 0 | 4 | 0 |
| 46. | இராமோதந்தம் | 0 | 8 | 0 |
| 47. | பழமொழிமூலமும் பழைய உரையும் (2-வது 100செய்) | 1 | 0 | 0 |
| 48. | சேதுநாடுந் தமிழும் | 0 | 6 | 0 |
| 49. | கடைவள்ளலார்காலம் | 0 | 6 | 0 |
| 50. | தமிழரும் ஆந்திரரும் | 0 | 4 | 0 |
| 51. | மதங்கசூளாமணி | 1 | 0 | 0 |
| 52. | கூடற்புராணம் | 0 | 10 | 0 |
| 53. | திருவள்ளுவர் | 0 | 6 | 0 |
| | ஷை ஆங்கிலத்தில் | 0 | 6 | 0 |
| 54. | அரும்பொருள்விளக்க நிகண்டு | 1 | 4 | 0 |
| 55. | மாறனகப்பொருளும் திருப்பதிக்கோவையும் | 0 | 12 | 0 |
| 56. | பாப்பாவினம் | 0 | 10 | 0 |
| 57. | மதுரைமும்மணிக்கோவை | 0 | 5 | 0 |
| 58. | பழனிப் பிள்ளைத்தமிழ் | 0 | 8 | 0 |

* இவ்வடையாளமிடப்பட்டவை இப்போது கைவசமில்லை.

குறிப்பு:-1. சங்கத்தினின்று மாதமொருமுறை அரிய பெரிய விஷயங்களைக்கொண்டு வெளியாகிவரும் "செந்தமிழ்"ப் பத்திரிகைக்கு வருஷச்சந்தா ரூ. 4. தனிப்பிரதியின் கிரயம் அணா 8. வெளிநாடுகளுக்கு வருஷச்சந்தா ரூ. 4—8—0. இதுவரை 29 தொகுதிகள் பூர்த்தியாயிருக்கின்றன. இவற்றுள் 1, 2, 3, 7, 8, 9, 10, 16-ம் தொகுதிகள் கைவசமில்லை. பைண்டு செய்யப்பெறாததொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ. 4—0—0-வீதமும், பைண்டு செய்யப்பெற்ற தொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ. 4—12—0 வீதமும் விற்கப்பெறும். வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

2. சங்கப்பிரசுரம், செந்தமிழ்ப்பிரசுரம், செந்தமிழ் முழுத்தொகுதி— இவற்றுள் ஒவ்வொருபுத்தகத்திலும் ஒரேதடவையில் 10 பிரதிகளும் அதற்கு மேற்பட்டும் வாங்குவோர்கட்கு மொத்தக்கிரயத்தொகையில் 100க்கு 10 வீதம் கமிஷன் தள்ளிக்கொடுக்கப்படும்.

லக்ஷ்மீநாராயணையர், மானேஜர்.